Registered No. M. 1823
Tel: KUMARAN, KARAIKUDI.

உ
சிவமயம்.

தனிப்பிரதி
விலை அணு ஒன்றரை.

# குமரன்

"என்கடன் பணிசெய்து கிடப்பதே."

(வாரப் பதிப்பு.)

வியாழன் தோறும் வெளியிடப்பெறுவது.

" கதரே உயிர் " " கருணையே தெய்வம். "

ஆரம் ரு. } காரைக்குடி விபவ - ஆடி - மீ ௪ - ௨ (19—7—28) { முத்து ...

(சென்ற வாரத்தொடர்ச்சி)

நால்வகை வளங்களும் நிரம்பிய கோசல நாட்டை ஆண்டுவந்த தசரதமன்னனது முதற்றேவியாய் கோசலை விளங்கினள். அறம் செய்த நல்வினையாலும் மறம்செய்த தீவினையாலும் மும்மை சாலுலகுக்கெல்லாம் மூலப்பொருளாய இராமன் கோசலையின் திருமகனாய்த் தோன்றினன்.

"விரிந்திரு தீவினைசெய்த
வெவ்விய தீவினையாலும்
அருங்கடையில் மறையறைந்த
அறஞ்செய்த அறத்தாலும்
இருங்கடகக் கரதலத்து
இவ்வெழுதரிய திருமேனிக்
கருங்கடலைச் செங்கனிவாய்
கௌசலை என்பாள் பயந்தாள்"

என்று கோமுனிவன் இராமனது பெருமையை மிதிலை மன்னனிடம் எடுத்துரைக்குமாற்றால் இவ்வுண்மை இனிதறியப்படும். இராமன் கோசலையின் மைந்தனாய்ப் பிறந்தானேனும் கைகேயியின் காதல் மைந்தனாய் வளர்ந்தான். அவ்வாறே கேகய மங்கை ஈன்றெடுத்த நீதியின் நிலையமாய பரதன் கோசலையின் காதல் மைந்தனாய் வளர்ந்தான். மைந்தர் இருவரும் இவ்வாறு மாறி வளர்ந்த தன்மையை கேகய மங்கையின் வாயிலாக கம்பர் அறிவிக்கும் நயம் ஆராய்ந்து மகிழ்தற்குரியதாகும். தலைமகனான இராமனுக்கு முடிசூட்டி அரசாங்க பாரத்தை அவன்பால் ஒப்புவிப்பதாக தசரதமன்னன் உறுதி செய்தபோது அந்நகரில் வாழ்ந்த அமைச்சரும் முனிவரும் அநுங்குல மக்களும் ஆனந்தவாரியில் மூழ்கினர்கள். இம்மகிழ்ச்சியைக் கண்டு மனம்பொறாத மந்தரை, கேகய மாதின் மாளிகைசென்று அந்நங்கையின் நலம்சான்ற சிந்தையை தன் நச்சுமொழிகளால் நலியத் தொடங்கினாள், மாளிகையில் மெல்லிய மஞ்சத்தில் இனிதமர்ந்திருந்த மங்கையை நோக்கி, "அன்னமே! உன்னை விழுங்கவரும் தீங்கை அறியாது உறங்குகின்றாயே; கருநாகம் போன்று பெருந்துன்பம் உன்னைப் பிணிக்க வருகின்றதே?' என்று அச்சமொழிகளால் தன் நச்சுக்கருத்தை அறிவித்தாள். மந்தரையின் தீய கருத்தை அறியாத மங்கை புன்னகைபூத்து கொடுமை சூழ்ந்த கூனியை நோக்கி "மாதே என் மைந்தர் நால்வரும் அறநெறி திறம்பாதவராய் வாழ்கின்றார்கள். அன்றியும் வேதப்பொருளாய் விளங்கும் இராமனை ஈன்றெடுத்த எனக்கு என்ன இடர் வரப்போகின்றது?" என்று தன் மனக்கருத்தை மறையாது உரைத்தாள். அது கேட்ட மந்தரை மனம்புழுங்கி "ஐயோ,

'வீழ்ந்தது நின்னலம்
திருவும் வீய்ந்தது
வாழ்ந்தனள் கோசலை
மதியினுல் என்றாள்'.

கோசலை தன் மதியினுல் வாழ்ந்தாள், உனது பொன்னும் போகமும் இன்றே வீழ்ந்தது" என்று மங்கையின் மாசற்ற மனத்தை மந்தரை மயக்க முயன்றாள். அப்பொழுதும் கேகய மங்கை மனம்கலங்காது மந்தரையை நோக்கி "மாதே கோசலையின் வாழ்விற்கு யாது குறை? மன்னர் மன்னனாய தசரதன் அவள் கணவன்; பன்னரும் பெரும்புகழ் வாய்ந்த பரதன் அவள் மைந்தன்; இதன் மேல் அவள் எய்தற்பாலதாய வாழ்வுதான் யாதோ" என்று மையறு மனத்தால் மொழிந்தாள். தலைமகனான இராமனைத் தன் மகனென்றும் குற்றமற்ற பரதனைக்கோசலையின் மைந்தனென்றும், கைகேசியின் வாய்மொழியால் கம்பர் அறிவிக்கும் நயம் ஆயுந்தோறும் அளவிறந்தவின்பம் பயப்பதாகும்.

## தாயும் சேயும்.

திருவாளர் ரா. பி. சேதுப்பிள்ளை பி. ஏ., பி. எல்.



* * *

இவ்வாறு இராமன்பால் இடையறாப் பேரன்புவாய்ந்த கைகேசியின் உள்ளம் அரக்கர் செய்த பாவத்தாலும், அந்தணர் இயற்றிய அருந்தவத்தாலும் மந்தரையின் சூழ்ச்சியில் அகப்பட்டு மயங்கித் திரிந்தது. ஆழிசூழ்ந்த உலகமெல்லாம் பரதனே ஆளவேண்டுமென்றும், தலைமகனான இராமன் தவக்கோலம் தாங்கிப் பதினாலாண்டு படர் கானகத்தில் உறையவேண்டும் என்றும், கேகய மாது கணவனிடம் கூசாது கூறினாள். வாய்மை தவறாத மன்னன் மங்கை கேட்ட வரங்களை மறுக்கும் வகையறியானாய் மண்மேல் விழுந்து அழுது கல்மனம் படைத்த, கைகேயியை நோக்கி,

"சொன்னேன் இன்றே இவள்என்
தாரமல்லள் துறந்தேன்
மன்னே யாவான் வரும் அப்பரதன்
தனையு மகனென்று
உன்னேன் முனிவா அவனும்
ஆகான் உரிமைக்கென்றான்
மாதே; இன்றே உன்னைத் துறந்தேன்
நீ என்தாரமல்லை"

உன்மைந்தனான பரதன் எனக்கு மகனுமல்லன், என்று ஆணையிட்டு ஆவிசோர்ந்தான். அப்பொழுது கைகேயி சிறிதும் மனம் கலங்காது தலைமகனைத் தன் மாளிகைக்கு அழைத்தாள். அந்திவந்தடைந்த தாயைக்கண்ட ஆன் கன்றுபோல இராமன் அன்னையின் முன்னே ஆர்வமுறச்சென்று அடிபணிந்து வாய்புதைத்து முன்றானை ஒதுக்கி மடக்கித் துவண்டு நின்றான். இவ்வாறு நின்ற மைந்தனை நோக்கி கடுமனம் படைத்த கைகேசி,

"ஆழிசூழ் உலக மெல்லாம்
பரதனே ஆள நீபோய்த்
தாழிரும் சடைகள் தாங்கித்
தாங்கரும் தவமேற் கொண்டு
பூழி வெங்கானம் நண்ணிப்
புண்ணியத் துறைகளாடி
ஏழிரண்டாண்டில் வா என்று
இயம்பினன் அரசன் என்றாள்"

பின்னவன் நாடாளவும், முன்னவன் காடாளவும் மன்னவன் பணித்தானென்று மங்கை கூறியபொழுது அஞ்சனவண்ணனது திருமுகம் அன்று மலர்ந்த செந்தாமரையிலும் இனிதாய் இலங்கிற்று. அரசாங்க பாரத்தை அகற்றிய சிற்றன்னையை அன்போடு நோக்கி ஆர்வத்தோடு தொழுது,

"மன்னவன் பணி யன்றாகில்
நும்பணி மறுப்பனோ, என்
பின்னவன் பெற்ற செல்வம்
அடியனேன் பெற்ற தன்றோ
என்னினி உறுதி யப்பால்
இப்பணி தலைமேற் கொண்டேன்
முன்னெளிர் கானம் இன்றே
போகின்றேன் விடையும்கொண்
[டேன்"

என்று அகமலர்ந்து அன்னையிடம் விடைபெற்றுச் சென்றான். விலக்கலாகாத விதியின் விளைவிற்கு வேறெவரையும் வெகுளலாகாதென்னும் உண்மையறிந்த இராமன், அன்னையின் பணியை ஆர்வத்தோடு ஏற்றான்.

* * *

கானகத்தில் காதலியைப் பிரிந்து கடுந்துயர் உழன்று அப்பால் அரக்கர் சேனையை அமர்க்களத்தில் வென்று வெற்றிமாலை சூடிய வீரனைக்கண்டு களிக்குமாறு தசரத மன்னன் விண்ணினின்றும் மண்ணிடைப் போந்தான். இறந்த தாதையை எதிரேகண்ட இராமன் அன்பினால் அடி பணிந்து தெய்வ ஒளியோடு திகழ்ந்த தந்தையிடம் இருவரங்கள் வேண்டினன்.

"தீயள் என்று நீ துறந்த
என் தெய்வமும் மகனும்
தாயும் தம்பியு மாம்
வரந்தரு கெனத் தாழ்ந்தான்"

"ஐயனே! தாரமல்லள் என்று நீ துறந்த என் தெய்வமாய கைகேயி மீண்டும் என் அன்னையாமாறு அருளவேண்டும். இன்னும் மைந்தன் அல்லன் என்று நீ, நீத்த பரதன் மீண்டும் என்தம்பியாமாறு பணித்தருள வேண்டும்" என்று கைகுவித்துத் தொழுது நின்றான். வீரன் வேண்டிய வரங்கள் இரண்டையும் உவந்தளித்து மன்னனும் உம்பர் நாடடைந்தான்.

"இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்"

என்று நாயனார் அருளிய வாய்மைக்கு, வேறு சான்றும், வேண்டுமோ?

* * *

அப்பால் அரிக்கணம் புடைசூழ இராமன் அயோத்தி மா நகர்க்கு மீண்டு வந்தபொழுது அன்னையர் மூவரும், அருந்தவ முனிவரும் வீரனைக்காணும் விருப்பால் எதிரே வந்து தோன்றினர்கள். விரதமாதவனை வீரன், முன்னே வணங்கினன். அப்பால் அருகே நின்ற தாயர் மூவரில் முந்தகண் கேகய மாதின் பாதம்பணிந்து பின்னர் இரு தாயரது தாள்களிலும் விழுந்து வணங்கினன்.

"கைகயன் தனையை முந்தக்
காலுறப் பணிந்து மற்றை
மொய்குழல் இருவர் தாளும்
முறைமையின் வணங்கும்
ஐயனை அவர்கள் தாமும் [செங்கண்
அன்புறத் தழுவித் தத்தம்
செய்யதா மரைக் கண்ணிரால்
மஞ்சனத் தொழிலும் செய்தார்"

என்று கவிநாயகர் வீரனது சேவையை விளங்க உரைத்தார். தசரத மன்னனது முதற்றேவியும் தன்னை ஈன்ற தாயுமாய கோசலையை முன்னே வணங்காது கானகம் செல்லும் கடும்பணி விதித்த கைகேயியை முதற்கண் வணங்கிய வள்ளலின் செய்கை வாயார வாழ்த்துதற்குரியதாகும். அருஞ் சினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும் அகலாது அவள் அருள் நினைந்தே அழுகும் குழவி போல், கானகத்திற்கு அனுப்பிய, கைகேசியின் கருணையை நினைந்து இராமன் அவ்வன்னையை அன்பினால் இன்புற வணங்கினன். இத்தகைய சீலம்வாய்ந்த இராமன் தாயருக்கும் மற்றும் யாவருக்கும் இனியனாய்,

"தாயருக் கன்று சார்ந்த
கன்றெனும் தகைய னானான்
மாயையிற் பிரிந்தோர்க் கெல்லாம்
மனோலயம் வந்த தொத்தான்
ஆவினை யார்க்குக் கண்ணுள்
ஆடிடும் பாவை யானான்
நோய்வுறத் துலந்த யாக்கைக்கு
உயிர் புகுந்தாலும் ஒத்தான்"

என்று கம்பர்பெருமான் அருளியவாறு உயிர்க்குயிராய் நின்று யாவர்க்கும் உலப்பிலா இன்பமளித்தான்.

---

(சென்ற வாரத் தொடர்ச்சி.)

இரு மாதங்கள் கடந்தன. சுசீலையும் மலே வாசஞ் செய்யும் மணளனுக்கு ஓர் முடங்கல் தீட்டினள். ஆனல், சம்பந்தன் விஷயத்தை மட்டும் அதில் குறிக்காதுவிட்டாள். தன் மகளின் மணத்தைப் பற்றியே அவள் வரைந்திருந்தாள். கல்கத்தாவில் வக்கீல் தொழில் புரியும் பாரிஸ்டர் ஆனந்த கிருஷ்ணர் தம்மகள்மீது காதல் கொண்டிருப்பதாகவும், இருவர் மனமும் ஒத்திருப்பதால் மணவினை முடிப்பது நியாயமென்றும் எடுத்துக் கூறினள். அன்புடன் தீட்டிய கடிதத்திற்கு சுந்தரர் விடுத்த பதில் அவளைத் திடுக்கிடச் செய்தது. ஏனெனில் லட்சுமியை மணஞ்செய்யவிரும்பும் பாரிஸ்டரே அவளைப் படுகாயமுறச் செய்தவர். ஓர்நாள் லட்சுமி தன் தோழிகளுடன் குதிரை வண்டியில் வீடுநோக்கி வந்து கொண்டிருக்கும்போது ஆனந்த கிருஷ்ணருடைய மோட்டார் குதிரைவண்டியைத் தாக்கியதால், அது அச்சு முறிந்து நடு ரோட்டில் கவிழ்ந்தது. இக் கொடுஞ் செயல் புரிந்தவருக்கு லட்சுமியை மண முடிக்கிறதாவென சுந்தரர் சிற்றங்கொண்டார். கணவரின் கடுமொழியைக் கண்ணுற்ற சுசீலை மறுமொழி பகரவியலாதுவளாவிருந்தாள். இந்நிலைமையில், தன் கணவர் வீடு திரும்பும் வரைக் காத்திருந்து, அவர் வந்த பின் அடி பணிந்து தெண்டனிட்டுக் கேட்டுக்கொள்ளுவதே உசிதமெனக் கொண்டாள்.

ஒத்த மனமுடையாரிருவர் கொள்ளும் மணமே மணமென்பதையும் மற்றவையெல்லாம் குணமில்லாப் பிண வாழ்க்கையென்பதையும் அவள் அறிவாள். 'காதலிருவர் கருத்தொருமித்து ஆதாவு பட்டதே இன்பம்' என்றபடி, இருவர்கருத்தும் ஒருப்படாவிடின், இல் வாழ்க்கையென்னும் சகடம் ஒரு அங்குலமேனும் ஒழுங்காக நடவாது. இக் கருத்தைச் சிஞ்சித்தும் எண்ணிப் பாராது தற்காலத்தில், பெற்றோர் பொருளை வேண்டியும், அழகை நோக்கியும், உத்யோகத்தை மெச்சியும், நேசமில்லாத மக்களுக்கு மணமுடித்து விடுகின்றனர். மணமக்களே அவர்களது பிற்கால வாழ்க்கைக்குப் பொறுப்பாதலால், இவ்விஷயத்தில் அவர்களிடம் சகல பொறுப்பையும் விட்டுவிடுவதே நலமாகும். இன்றேல், 'நேசமில் வதுவை நாசகாரணமே' என்ற பெரியார் வாக்கிற் கிணங்க வாழ்க்கை முற்றும் துன்பமயமாகவே முடியும். இவ்விஷயத்தை சுசீலை நன்கறிந்திருந்தாளாகையால், தன் அருமைப் புதல்வி விரும்பியபடி அவளை பாரிஸ்டர் ஆனந்த கிருஷ்ணருக்கே மண முடிப்பதென நினைத்தாள். எனினும் தனது கணவர் தன் எண்ணத்திற்கு முற்றும்

# பெண்ணின் பெருமை.

மாறாக விருப்பதை நினைந்து நினைந்து வருந்தினள்.

இருமாதங்கள் சென்றன. ஓர் நாள் இடீரென சுந்தரர் தன் வீட்டினுள் நுழைந்தார். அச்சமயம் அவர் வீட்டிற்கு வருவாரென ஒருவரும் எதிர்பார்க்கவில்லை. வீட்டை அடைந்தவர் நேராகத் தன் அறையை நோக்கிச் சென்றார். எதிர்பாராதபடி தன் கணவரைக் கண்ணுற்றதும் சுசீலை திடுக்கிட்டாள். தான் விற்ற ஆபரணங்களும், அருமைப் புதல்வன் அமெரிக்கா சென்றதும் அவள் மனத்தில் தோன்றி அவளைப் பயமுறுத்தின. உண்மையாகவே அவள் கணவருக்கு அச்சப்பட்டாள். எல்லாம் செய்துமுடிந்தாய்விட்டது. இனி வருவது வந்தேதீரும். கவலைப்படுவதால் என்ன பயன். அனுபவிக்கவேண்டியதே என முடிவு கட்டிக்கொண்டாள். அவள் இவ்வளவு தூரம் வருத்தப்பட வேண்டியதில்லை. ஏனெனில், சுந்தரர் அவளிடம் கோபங் கொள்ளவோ, கடுஞ்சொற் கூறவோ இல்லை. எல்லாவற்றையும் அவரிடம் சொல்லி மன்னிப்புப் பெற்றுக்கொள்ளலாமாவென ஓர் சமயம் நினைத்தாள். பிறிதொரு சமயம், அவரது மனத்திற்கு மாறாக நடந்துவிட்டு எங்ஙனம் மன்னிப்புக் கேட்க அவள் உள்ளம் உன்னும்? இவ்விதமாக அவள் எண்ணி எண்ணிப் புண்பட்டுக் கொண்டிருக்கும்போது, அவளது சகோதரன் அங்கு தோன்றி 'தங்காய்! கவலைப்படாதே. அவர் சௌக்கியப்பட்டுவிட்டார். இனிப் பயப்படவேண்டியதில்லை. அவரை அணுகி ஒன்றும் பேசிவிடாதே. சம்பந்தன் அமெரிக்கா சென்றதை அவர் அறிவார். பம்பாயினின்றும் அவன் கப்பலேறிய ஒருவாரத்திற்குள் ஒரு நண்பர் விஷயத்தை எங்கட் கறிவித்தார். லட்சுமி விஷயத்தையும் அவர் அறியாதிருக்கவில்லை. ஆகையால், நீ வீண் கவலைப்பட வேண்டாம்' எனக்கூறி ஆறுதலளித்தார். சுசீலையின் கண்களினின்றும் கண்ணீர் தாரை தாரையாக வழிந்தோடிற்று.

சுந்தரர் மீது தோன்றியிருக்கும் மாற்றத்தைக்கண்டு சுசீலை கலக்கமுறாமலிருக்கவில்லை. என்ன செய்வதென அவள் திகைத்தாள். அவரிருந்த அறையை நோக்கிச் சென்றாள். நீண்ட நாற்காலியில் சுந்தரர் சாய்ந்து படுத்திருந்தார். கதவைத் திறந்து உட்சென்ற சுசீலை அவரை அணுகினள். எனினும் அவர் கண்விழித்துப் பார்க்கவில்லை. மௌன விரதம் பூண்டிருந்த மணவாளரை நணுகி, தன் மெல்லிய கரங்களை அவர் தோள்மேல் போட்டுக் கொண்டு, தலைகுனிந்து இனிய குரலில், 'அன்பு கெழுமிய துணைவ! தாங்கள் வீடுவந்து சேர்ந்ததற்காகக் கடவுளை வழுத்துகிறேன்' எனக்கூறி விம்மி விம்மி அழுதாள். 'உனது சகோதரனைக் கண்டாயல்லவா?' என சுந்தரர் வினவினர். 'ஆம். அவரிடமிருந்து சகல காரியங்களையும் அறிந்துகொண்டேன். எனதாருயிர் அன்பே! உங்கள் விருப்பம்போல் இனி எல்லாம் நடக்கும். உங்கள் வீட்டிலிருந்தே நீங்கள் நல்லுடலுடன் வாழலாம்'

என விடையிறுத்து, தன் கணவர் ஏதாவது மறுமொழி கூறமாட்டாராவென எதிர் பார்த்து நின்றாள். ஆனல் அவர் ஓர் வார்த்தையும் பேசாது அசைவற்று இருந்தார். அவரது கழுத்தைச்சுற்றிய கரங்கள் நகராது இருந்தன. அவளது அன்பைப் பெற்று அகமகிழ்ந்து இருப்பார் போல் சுந்தரர்தோன்றினார். எனவே, அவரது தலையை எடுத்துத் தன் மடிமீது கிடத்தி அதை உற்றுநோக்கினள் சுசீலை. தன் கணவர் வீடடைந்ததும் தன் அருமை மகனைப்பற்றிக் கேட்பாரென்றும், அவருக்கு இறுக்கவேண்டியபதில் இன்னதென்றும், அவர் கொள்ளும் கோபத்திற்குத் தான் ஆளாக வேண்டுமென்றும் பற்பலவாறெல்லாம் அவள் எண்ணிக்கொண்டிருக்க வீடுவந்தவர், அவ்விஷயங்களைப்பற்றி ஒன்றுங் கேளாது, ஒன்றும் பேசாது மௌனமாயிருந்தால் மங்கையின் மனம் வாடாதென்செய்யும்? அவர் வீட்டிலில்லாத போழ்து தான் செய்தகாரியங்களின் கணக்கைபபற்றிக் கேட்பாரெனவே அவள் நினைத்திருந்தாள். இவ்விதமாக அவர் மனச்சஞ்சலத்துடன், ஆழ்ந்த கண்ணும், கவன்ற நோக்கும், வருந்தும் உள்ளமும் கொண்டு சோர்வுற்று நாற்காலியிற் கிடப்பாரென அவள் கனவிலும் கருதினளில்லை. தானொன்று நினைக்கக் கடவுளொன்று நினைத்தது போலும்! அவரது மனத்திற் குடிகொண்டுள்ள எண்ணத்தையோ, அல்லது அவர் முடித்துள்ள தீர்மானத்தையோ அறியமுடியாதவளாய் அல்லற்பட்டாள். ஒருவேளை தன் கணவரிறந்து விடுவாரோவென ஐயுற்றாள்; இவ்விதமாக அவள் பலவாறெல்லாம எண்ணிக்கொண்டிருக்க அவர் ஒன்றும் பேசாது உயிரற்றவர் போல் கிடந்தார். உணவு உட்கொள்ளும் போதும் அவர் ஒன்றும் பேசவில்லை.

இரவில் படுக்கையிற் படுத்துக் கொண்டே, சின்னாட்களில் தம் வாழ்வில் ஏற்பட்ட மாறுதல்களை உன்னி உன்னிப் பார்த்தார். தான் எழுதிவைத்திருந்த மரண சாசனத்தை மாற்றிவிடலாமாவெனச் சிந்தித்தார். தனக்குப் பணிந்து நடக்கமறுத்த மகனுக்கு ஒருதம்படியும் கிட்டாது செய்துவிடுவது உசிதமென்றும், அதுவே அவன் செயலுக்குத்தக்க பரிசென்றும் நினைத்தார். தனது எண்ணத்திற்கு மாறாகத் தன் மகள் லட்சுமியும் நடக்க உறுதிகொண்டால், அவளுக்கும் ஒன்றும் கொடுக்கக் கூடாதெனத் தீர்மானித்தார். இவ்வெண்ணங்கட்கெல்லாம் குறுக்கே ஓர் எண்ணம் தோன்றிற்று. என்னே நம்மதியீனம்! என் சாசனத்தை மாற்றவேண்டும், எல்லா வஸ்துக்களையும் சுசீலையின் ஆதிக்கத்தில் வைத்து விட்டுப் போனலென்ன? சகல பொறுப்புக்களையும் அவள்பால் விட்டுவிடுவதே மேல் என ஓர்ந்தார். 'இறந்த பிறகு யார் எடுத்தாலென்ன?' எனத் தீர்மானித்துத் தன் மனைவியே சொத்துக்களை ஒழுங்காக வைத்துப் பரிபாலிக்கத் தக்கவளென்று முடிவுகட்டினர். இளம்பிராய முதலே இருவரும் நேசித்து வந்தனராதலால், அவளது உயர்குணங்களை அவர் நன்கறிந்திருந்தார். ஆகையால் தீமை பயக்கும் காரியங்களை அவள் ஒருபோதுஞ் செய்யாளென அவர் நம்பிக்கை கொண்டார். நல்லறிவு பெற்ற பெண்கள் வீட்டுக்காரியங்களை ஆடவரைவிட ஒழுங்காகச் சீர்ப்படுத்துவார்களென்றும், ஆகையால் அவர்கள் வழிவிடுதலே சாலச் சிறைப்புடைத்தாமென்றும் எண்ணியவராய்த் தம் மரண சாசனத்தை மாற்ற மனங்கொண்டாரல்லர்.

திடீரென அவர் வாயினின்றும் 'அரகர' என்ற ஒலி கேட்டது; ஆவியும் போயிற்று. சுசீலை திடுக்கிட்டெழுந்து திகிலடைந்தாள், பலவாறு எண்ணியெண்ணிக் கண்ணீர் விட்டாள். என்ன பயன்? மாண்டார் மீள்வரோ இம்மண்ணுலகில்?

சிலமாதங்கள் கழிந்தன. லட்சுமிக்கும் ஆனந்த கிருஷ்ணனுக்கும் விமரிசையாக மணம் நடந்தது. இனிமையான வாழ்க்கையை அவர்கள் நடத்தி வருகின்றனர், ஞானசம்பந்தம் பல பெரிய பட்டங்களைப் பெற்று, ஓர் என்ஜினியர் வேலைபார்த்து வருகிறான். பெருமதி படைத்த பெண்ணின் பெருமையால் அக்குடும்பம் தலைவனை இழந்தாலும், வெகு மேன்மையாக நடைபெற்று வருகிறது.

'இந்தியன் ஸ்டோரி டெல்லர்.'

---

# தேவை.

குமரன் அச்சுக்கூடத்தில் ஸ்டோர் கிப்பர் வேலைக்கு ஒருவர் தேவை. ஐநூறு ரூபாய்க்கு செக்யூரிடி கொடுத்தல் வேண்டும். பிராமணரல்லாதாரின் விண்ணப்பமே கவனிக்கப்படும்.

மானேஜர்,
குமரன் அச்சுக்கூடம்,
காரைக்குடி.

---





# இந்தியாவில்
## மோட்டார் தொழிற்சாலை.

பம்பாயில் உள்ள ஜெனரல் மோட்டார் எக்ஸ்போர்ட் கம்பெனியார் இந்தியாவில் மோட்டார் உற்பத்தி தொழிற்சாலை ஒன்றை ஆரம்பிக்கப் போகிறார்கள், என்று ஒரு பெரிய வதந்தி யேற்பட்டிருந்தது பலருக்கும் தெரிந்த விஷயம். அந்த வதந்தி உண்மையாகிவிட்டதென்றும், அத்தகைய தொழிற்சாலை ஒன்றை இந்தியாவில் ஏற்படுத்த மேற்படி கம்பெனியார் தீர்மானித்து விட்டார்கள் என்றும், இப்பொழுது தெரியவருகின்றது. மோட்டார் தொழிற்சாலையைப்பற்றி விவரங்கள் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றின் சுருக்கம்வருமாறு:—

இந்தியா, பர்மா, பர்சியா, சிலோன் முதலிய தேசங்களுக்குத் தேவையுள்ள மோட்டார்கார்களை இந்தியாவில் உற்பத்தி செய்யும்படியான தொழிற்சாலை ஒன்றை பம்பாயில் ஏற்படுத்த தாங்கள் தீர்மானித்திருப்பதாக ஜெனரல் மோட்டார்ஸ் கார்பொரேஷன் ஓர் அறிக்கையை வெளியிட்டிருக்கிறார்கள். ௩௨ கோடி ஜனங்களைப் படைத்த இந்திய தேசம் மோட்டார் உலகத்துக்கு முக்கியமான மார்க்கட்டாக இருக்குமென்பது இப்போது உணரப்பட்டுவிட்டது.

ஆரம்பிக்கப்படவிருக்கும் புதிய தொழிற்சாலைக்கு 'ஜெனரல் மோட்டார்ஸ் இந்தியா லிமிடெட்' என்று பெயரிடப்படும். தொழிற்சாலையினுடைய பிளான்கள் கூடிய சீக்கிரம் கிடைத்துவிடும். ஆரம்பவேலைகள் ௧௯௨௯-ம் வருடம் ஜனவரி முதல்தேதி தொடங்கப்படும் என்று எதிர் பார்க்கப்படுகின்றது. ஜெனரல் மோட்டார்ஸ் என்பது அதிமகத்தான ஒரு ஸ்தாபனம். இந்த ஸ்தாபனத்தின் ஆதிக்கத்துக்கு உட்பட்ட ௭௨ சிறு சிறு கம்பெனிகள்தான் செவர்லட், ஓல்ட்ஸ்மாபைல், ஓக்லண்டு, போண்டியாக்பயூக், லாயல், காடிலாக், வாக்ஸ்ஹால், முதலிய உலகப் பிரசித்தி பெற்ற பல்வேறு வகைப்பட்ட கார்களையும், டிரக்களையும், உற்பத்திசெய்கின்றன. இந்த ஸ்தாபனத்தின் மூலதனத்துக்கு உவமானம் கூறவேண்டுமானல், இந்தியாவிலுள்ள சகல ரயில்வேக்களிலும் எவ்வளவு மூலதனம் போடப்பட்டிருக்கிறதோ அந்தத் தொகையைவிட மும்மடங்கு அதிகம் என்று ஒருவாறு கூறலாம். ௧௯௨௭-ம் வருடத்தில் மட்டும் இந்த ஸ்தாபனத்தின் மூலமாக உற்பத்தி செய்யப்பட்ட கார்களின் மொத்தத் தொகை [illegible] என்றால் யாருக்குத்தான் இந்த செய்தி பிரமிப்பையும், வியப்பையும் உண்டுபண்ணாது!

ஜெனரல் மோட்டார்ஸ் என்பது ஒரு ஏகதேச ஸ்தாபனமல்ல. அது ஒரு சர்வதேச ஸ்தாபனமே யாகும். அதன் தொழிற்சாலைகள் ௨௩ இடங்களில் இருக்கின்றன. சகல தேசங்களுடைய நன்மைக்காகவும் அது உழைத்து வருகின்றது. உலகத்தின் சகல தேசங்களிலும் அந்த ஸ்தாபனத்தினுடைய பங்குகாரர்கள் இருந்து வருகின்றனர்.

பம்பாயில் ஏற்படுத்தப்படும் தொழிற்சாலைக்கு ஆரம்ப முதலீடாக ௧ கோடி ரூபாய் போடப்படும். நூற்றுக் கணக்கான இந்தியர்களுக்கு நல்ல தொழிலும் உத்யோகமும் ஏற்படும். தொழிற்சாலைக்கு வேண்டிய உபகரணங்கள், சில்லரைச் சாமான்கள் ஆகிய யாவும் இந்தியாவிலேயே வாங்கப்படும். இங்ஙனம் ஏராளமாக இந்தியச்சாமான்களை வாங்குவதால் சுதேச கைத்தொழில் ஸ்தலங்களுக்கு அதிகவேலையும் அதன்மூலமாக இந்திய ஜனங்களில் அதிகம்பேருக்கு வேலையும் கூலியும் கிடைக்க வழி ஏற்படும்.

ஜெனரல் மோட்டார் ஸ்தாபனத்தின் பம்பாய்கிளையானது இந்திய சட்டத்தின்படி ரிஜிஸ்டர் செய்யப்பட்டு பிரத்யேக டைரெக்டர்களுடன், சுதந்தரமுள்ள தனி ஸ்தாபனமாக இருக்கும். மிஸ்டர் ஜியார்ஜ் வி. ஸீயர்ஸ் என்பவர் மானேஜிங் டைரக்டராக இருந்து சகல நிருவாக அதிகாரங்களையும் வகிப்பார்.

மோட்டார் வாங்குகிறவர்கள் அதன் விலையை பல தவணைகளில் கொடுத்து சுலபமாக அதை வாங்குவதற்குள்ள சகாயங்களைச் செய்வதற்கென்று ஒரு கிளை ஸ்தாபனம் தொழிற்சாலையோடு சேர்ந்தாற்போல் ஏற்படுத்தப்படும்.

தொழிற்சாலையில் மோட்டார் உற்பத்திக்காக ௨௯ தனித்தனி இலாகாக்கள் ஏற்படும். தொழிலாளிகளுக்கு சாலையிலேயே போஜன விடுதிகள் அமைக்கப்படும். அதி நவீனமான மெஷின்களைக் கொண்டு முற்றிலும் புதிய வழிகளில் இந்த தொழிற்சாலை வேலைசெய்யும். தொழிற்சாலையுடன் கூட மோட்டார்தொழிற்பயிற்சிக்கான பள்ளிக்கூடமொன்றும் திறக்கப்படும். இந்தியாவிலுள்ள சகல மோட்டார் வியாபாரிகளும் அதற்கு மாணவர்களை அனுப்பலாம்.

"இந்தியாவின் வருங்கால க்ஷேமத்துக்கு இப்புதிய தொழிற்சாலை பெரிய உதவியாக இருப்பதோடு, இந்தியா, பர்மா, சிலோன் முதலிய நாடுகளிலுள்ளவர்களுக்கும் இந்த சுதேச உற்பத்தியின் மூலமாக பெரும்பயன் ஏற்படுமென்பது நிச்சயம். இந்தியாவுக்குத் தேவையுள்ள கார்களை இந்தியாவிலேயே உற்பத்தி செய்தால்தான் இந்திய ஜனங்களுடைய தேவைகளைத் திருப்திகரமாக பூர்த்தி செய்யலாம் என்ற முடிவுக்கு நாங்கள் வந்திருக்கின்றோம்" என்று இந்தக் கம்பெனியின் மானேஜிங் டைரக்டர் தெரிவித்திருக்கிறார். இந்தியாவின் பிரத்தியேகமான தேவைகளுக்கு ஏற்றவழியில் புதிய கார்கள் உற்பத்தி செய்யப்படும் என்றும் அறிவிக்கப்படுகின்றது.

# கருணைக் கடல்.

திருவாளர் எஸ். தேசிக விநாயகம் பிள்ளை.



(சென்ற வாரத் தொடர்ச்சி)

(வேறு.)

தாயாட்டின் துயர் போக்குதல்.

இத்தனையுங் கண்டுமன மிரங்கி நொண்டும்
இளமறியை யிருகரத்தி னெடுத்து வையம்
அத்தனையுந் தாங்குபுய மணிய வேந்தி
அருளுருவா மண்ணலுமத் தாயை நோக்கி:— (எ)

(வேறு)

அல்ல லுறவேண்டாம்—இனித்துயர்
ஆறி வருவா யம்மா.
செல்லு மிடத்தி லுன்றன்—மதலையைச்
சேர்த்து விடுவே னம்மா. (அ)

ஏழைப் பிராணிகளின்—இடர்களைத்
தின்ப மளிப்பது போல்
வாழு முலகிதனில்—செயுமொரு
மாதவம் வேறு முண்டோ? (கூ)

மீளாத் துயர்க் கடலில்—உயிரெலாம்
வெந்து தவிக்கையிலே
பாழாம் குகை தேடிச்—செயுந்தவம்
பாவமே யாகு மம்மா. (௧௦)

(வேறு)

இடையரைக் கண்டு வினவுதல்.

என்றுகனிந் துளமுருகி நின்ற காலை
எமன்விட்ட தூதுவர்போ லாட்டை யெல்லாம்
குன்றிருந்து தாத்திவரு மவரைக் கண்டு
குவலயத்தி லருள்மாரி பொழியு மையன் (௧௧)

மாலைப் பொழுதின்னு மாகவில்லை—வெயில்
மண்டை பிளந்து வெடிக்குதையோ
சாலை வழியிந்த ஆடுகளும்—எங்கு
சாய்ந்து செலுமையா கூறுமென்றான். (௧௨)

(தொடரும்.)

# காந்தி பேச்சு.

கணக்கெழுதாவிட்டால் போனது வந்ததொன்றுந் தெரியாது. எந்த வகையில் எப்படிப் போயிற்றென்பதை யறிய முடியாது. அக்கிரமச் செலவு செய்தால் அதனைக் கணக்கில் எழுத முடியாது. எழுதினல் புரட்டாக எழுத வேண்டும். புரட்டு எழுதக் காந்தியின் மனம் ஒருப்படாது. எனவே காந்தி தப்பாகப் பணம் செலவிட முடியவில்லை. பணச்செலவின்றி நெறிதவற முடியாதன்றோ? இதுவும் காந்தி நேர்மையாக இருந்ததற்கு ஒரு காரணமல்லவா?

ஃ ஃ

காந்தி பல இயக்கங்களில் கலந்துழைத்திருக்கிறார். ஒரு இயக்கத்திலாவது அவர் கடன் வாங்குவது கிடையாதாம். எப்போதும் இருப்பு இருந்தே வருமாம். வரவுக்குத்தக்க திட்டம் போட்டால் பணமுடையேற்படாது. பணமுடையில்லாவிட்டால் கடன் வாங்கவேண்டியதில்லை. செட்டாகவும் அளவோடும் செலவிட காந்தி பழகியிருந்ததால்தான் அவருடைய நிர்வாகத்தில் பணத்தட்டு வர வழியில்லாமற் போயிற்று.

ஃ ஃ

ஒவ்வொரு பைசாவுக்கும் காந்தி கணக்கெழுதியதன் பயனாகச் செலவினங்களைக் குறைக்க வேண்டுமென்ற உணர்வு ஏற்பட்டதாம். முக்கியமானவற்றுள் வண்டி வாடகையுமொன்றென்று தெரிந்ததாம். மற்ற வீண் செலவுகளைக் குறைத்ததோடு தினப்படி எட்டுமைலுக்குமேல் பத்துமைல் வரை கால்நடையை மேற்கொண்டாராம். இதனல் உடலும் உரம்பெற்றதென்று அவர் கூறுகிறார்.

ஃ ஃ

நாளுக்குநாள் செலவு குறைந்தது. மாளிகை குடிசையாயிற்று. இரண்டு அறைகள் வாடகைக்குப் பிடித்திருந்ததையும் விட்டு ஒரு அறை பிடித்தார். சமையலும் தன் கையினலேயே பெரும்பாலும் செய்துகொண்டாராம். ஆடம்பர வாழ்வு குறையக் குறைய நேரம் அதிகமாகக் கிடைத்ததாம்.

ஃ ஃ

ஆடம்பர வாழ்வை விட்டதால் இன்பமற்றதாகக் காந்தியின் வாழ்வு போய்விடவில்லையென்றும், அதனல் அகவாழ்வும் புறவாழ்வும் ஒற்றுமைப்பட்டுவிட்டதென்றும், பொய்மை வாழ்வு நெறிகள் விலகினவென்றும் காந்தி கூறுகிறார்.

ஃ ஃ

சைவ உணவில் வரவர ஆராய்ச்சி காந்திக்கு மிகுந்தது. சமயம் விஞ்ஞானம் சௌகரியம் வைத்தியம் எனும் நான்குவழிகளிலும் காரணங்கள் கிடைத்தனவாம். வரவர சைவ உணவின் ஆராய்ச்சி அதிகமாயிற்று. சங்கத்தில் சேர்ந்து முக்கியஸ்தருமாகிவிட்டார் நமது காந்தி.

ஃ ஃ

இந்த மாக்கற் ஆகாரத்தைப்பற்றிய அறிவும் அனுபவமும் வளர வளர, சுவை என்பது நாவில் இல்லையென்றும் மனத்திலேயே இருக்கிறதென்றும் காந்தி உணர்ந்தாராம். மனமடங்கினல் காய்ந்த சுவையும் சக்தி ஒழிந்துபோகிறதன்றோ?

ஃ ஃ

லண்டன் சைவ உணவுக்கு முட்டை விலக்கன்று. இதனல் சைவ உணவுச் சாலைகளில் தாராளமாக முட்டைகள் சேர்த்து பெரும்பாலான பொருள்கள் தயாரிக்கப்படும். ஆதலால் இந்த உணவுச்சாலைகளிலும் காந்தி தாராளமாக எல்லாவற்றையும் நம்பி வாங்கியுண்ணமுடியவில்லை. ஒவ்வொன்றிலேயும் விசாரித்தே சாப்பிடவேண்டியதாயிற்று.

# மேயோவுக்கு மறுப்பு.

வி. எப். ஆண்ட்ரூஸ் 'யங் இந்தியா'வில் எழுதியதன் சாரம் வருமாறு:—

இந்தியாவிலுள்ள தொழில் இயக்கம் சமூகச் சீர்திருத்தங்களிலும், தீண்டாமை விஷயத்திலும் சிறந்த கொள்கைகளைக் கொண்டுநிற்கிறது. அவ்வியக்கத்தினுள்ளுங் கூட சமூக வித்தியாசங்களில்லை. ரவீந்தநாத் தாகூர், காந்தி, லஜபதிராய், (காலஞ்சென்ற சுவாமி சிரத்தானந்தர்,) பண்டித மதன் மோகன மாளவியா, முதலியோர், தீண்டாமையை முற்றும் விலக்க வேண்டுமென்றே தீவிரமாக உழைக்கின்றனர். பண்டைக்காலத்துத்தீய பழக்கங்களிலொன்ருக அதை அவ்வியக்கம் கொள்ளுகின்றது. வியாபாரக் கூட்டுறவுகளில் அவ்வியக்கம் தாழ்த்தப்பட்ட வகுப்பினரைத் தடங்கலின்றி சேர்த்துக்கொள்ளுகிறது. அவர்களைச் சகோதரர்களாகவும் தோழர்களாகவுமே அது வரவேற்கிறது. கற்ற இந்தியர்களுடைய பொதுக்கொள்கை இதுவாகும்.

வேல்ஸ் இளவரசர் டெல்லிக்கு வந்தபொழுது தீண்டாத்தகாதவர் அவரை வணங்கினதாக மிஸ்மேயோ கூறுகிறாள். நான் டெல்லிக்குச் சென்றிருந்தபொழுது மேற்குறித்த சம்பவத்தைப்பற்றி விசாரித்தேன். அவள் கூறுவதுபோல் வணக்கம் ஒன்றும் செய்யப்படவில்லை; சமீபத்திலுள்ள கிராமங்களிலிருந்து, பலவித முறைகளால்—ஆனால் உயர்ந்த முறைகளன்று—தூண்டப்பட்டவர்களே அங்கு குழுமியிருந்தனர். இவ்விதமாகத் தாழ்த்தப்பட்டோர் தேசிய விஷயங்கட்காக உபயோகப்படுத்தப்படுவது ஓர் இழிவான செயலாகும். மிஸ். மேயோ இவ்விஷயத்தை எடுத்தாண்டிருப்பது உண்மையான சமூக சீர்திருத்தத்திற்குத் தீமை விளைப்பதாகும். ரோமாபுரி காலந்தொட்டே இவ்விதப் பிரித்தாளுங் கொள்கை கையாளப்பட்டு வருகிறது. தாழ்த்தப்பட்ட வகுப்பாரும் இம்முறையின் பொய்ம்மையை உணர்ந்துவிட்டார்கள். அவர்களுடைய சேவைக்காகத் தம் வாழ்வு முழுவதையும் காந்தி அர்ப்பணஞ்செய்து விட்டதால் அவர்கள் அவரைப் பின்பற்றுகிறார்கள். அவர்களது நம்பிக்கையைப் பெற்றவரையே அவர்கள் பின்பற்ற முடியும்.

இக்கொடுமையை எதிர்த்து நிற்பது இந்தியாமட்டுமல்ல; ஏகாதிபத்திய அடிமைக்குழியில் வீழ்த்தப்பட்ட நாடுகளுடைய பிரச்னையைப் போலவே இந்திய பிரச்னையுமிருக்கிறது. தீர்க்கப்படாத 'நிற'ப் பிரச்னையுள்ள அமெரிக்காவும் வகுப்பு வேற்றுமை நீடித்திருக்கும் தென் ஆபிரிக்காவும் இவற்றைச் சார்ந்தவையே. ஜப்பானிலும் தாழ்த்தப்பட்ட வகுப்பாரிருக்கின்றனர். இவையெல்லாம் ஒரே பிரச்னையே; தொழில் இயக்கம் இதைத்தீர்க்கவே முனைந்து நிற்கிறது.

பல நூற்றாண்டுகளுக்கு முன் ஏற்பட்ட வகுப்பு வெற்றிகளையும், தேச வெற்றிகளையுமே, தற்காலமிருந்துவரும் தீண்டப்படாதவர் குறிக்கின்றனர். பண்டைக்கால நிற வேற்றுமையையும் அவர்கள் குறிக்கின்றனர். ஆனால் இவ்வேற்றுமை தற்காலமில்லாதொழிந்துவிட்டது. பல நூற்றாண்டுகளாக ஏற்பட்ட இச்சச்சரவுகள் ஒரேநாளில் அழிந்து போகத்தக்கனவல்ல. ஆனால், கற்ற இந்தியர்கள் சிறிதும் தயக்கமின்றி இப்பழக்கத்தை அறவே ஒழிக்கக் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார்களென்பதை இந்தியத் தொழில் இயக்கப் பிரதிநிதிகள் பிறதேசங்கட்குப் பயமின்றிச் சொல்லக் காத்திருக்கின்றனர். அடிமைப்பட்டிருப்பதால் ஏற்படும் துன்பத்தை அவர்கள் ஆழமாக உணர்ந்திருப்பதால் பிறர்மீது அதைச் சுமத்த அவர்கள் ஒருப்படவில்லை. ஆகையால் ஒருகணமேனும் அவர்கள் தீண்டாமையைத் தாங்கி நிற்கவில்லை. அதேசமயத்தில் மேனாடு இந்தியாவைக் கண்டிக்க முன்வரக் கூடாதென்றும் கூற அவர்கட்கு உரிமையுண்டு. இந்தியத் தொழிலாளிகளையும் பிறரோடு சமமாகப் பாவித்து நடத்த வேண்டுமென்பதாக அவர்கள் தென்ஆபிரிக்கா வெள்ளையர்களைக் கேட்டுக்கொள்ளுகிறார்கள். சமவேலைக்கு சமகூலியும் இருவகுப்பாருக்கும் பொதுவான குறைந்த கூலியும் கொடுக்கப்படல் வேண்டும்.

இந்தியா சமாதானம் நிலவும் தேசமாகும். திடீரென உண்டாகும் உணர்ச்சியால் எழுச்சிகொண்ட சில கூட்டங்கள் தோன்றலாம். ஆனால் இந்தியக்கிராமவாசி ஹிந்துவானாலுஞ்சரி, மகமதியனானாலுஞ்சரி, சமாதானத்தையே விரும்புகிறான். இவ்விதமாகப் பொதுப்படக் கூறும்போது விசேடமான சிலவற்றை விலக்காக ஒதுக்கிவைக்க வேண்டுமென்பது உண்மையே. பஞ்சாபிலுள்ள யுத்த வீரர்களும், வடமேற்கு எல்லைப்புறக் கூட்டத்தாரும் நம்மனத்துள் தோன்றுகின்றனர். இன்னும் இவர்போன்ற போர்த் தொழிலைக்கொண்டவரும் நினைவுக்கு வருகின்றனர். ஆனால், இவ்விதப் போர்ப் பிரதேசங்களை யெல்லாம் ஒன்றுசேர்த்து, சமாதானத்தை விரும்பும் பாகத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால் முன்னையது மிகவும் சுருக்கமாகவே யிருக்கின்றது.

ஆகையால் இதுவரைக் கூறியவற்றிலிருந்து, இந்தியாவின் ஆத்மாவோடு பேசப்புகுவோன், ஒழுக்கத்துடன் சாத்வீகமுறையிலேயே பேசவேண்டுமென்பது புலனாகின்றது. எனவே, நாட்டார் யாவரும் போற்றி நேசிக்கும் ஒருவராலேயே உண்மையான சமூக சீர்திருத்தம் உண்டாக முடியும். பல திரப்பட்ட குழப்பங்களும் எழுச்சிகளும் தோன்றியிருக்கும் இந்நாளில், காந்தி போன்ற பெரியாராலேயே சிறந்த சீர்திருத்தங்கள் செய்யமுடியுமேயன்றி, சட்டசபைத் தீர்மானங்களால் ஒன்றுஞ் செய்ய முடியாதென்பது எளிதிற் புலப்படுகின்றது. நற்குணங்கள் ஒருங்கு திரண்டு உருவெடுத்தாற்போன்று தோன்றியிருக்கும் காந்தியடிகளின் உயரிய ஒழுக்கமே, அவரது பேச்சிற்குப் பெருஞ் சக்தியளிக்கின்ற தென்பதை யாரும் மறுக்கமுடியாது.

இத்தகைய அந்தரங்க இயக்கங்களைப் மிஸ் மேயோ தன் புத்தகத்தில் குறிப்பிடவில்லை, இதை அவள் கவனிக்காது விட்டுவிட்டாளென்றல்ல: ஆனால் அவள் விட்டுவிட்டது அவளது அவசரமாய் முடிக்கப்பட்ட சுற்றுப் பிரயாணத்தையும், விஷயங்களை அறிய அவள் நாடிய ஆட்களின் தன்மையையுங் குறிக்கின்றது. காந்தி இவ்விஷயத்தில் செய்யும் வேலையை நான் நேராகப் பார்த்திருக்கிறேன். மிஸ் மேயோ கூறுகிறபடி, அவர் சபர்மதியில் சௌக்கியமாக உட்கார்ந்து காலத்தைப் போக்கவில்லை. பல துன்பங்களைச் சகித்துக்கொண்டு அவர் இந்தியா முழுமையும் பல தடவை சுற்றி இருக்கின்றார். மிகத் தூரமான கிராமப் பிரதேசங்களையும் அவர் பார்வையிட்டிருக்கிறார். தீண்டப்படாதவர்களிடையே அவர் வாழ்ந்திருக்கிறார். தீண்டாமையின் கொடுமை, தேவதாசிகள் தீமை, இளமை மண இன்னல், முகமூடி மூடத்தனம், இளம் பெண்கள் மீது சுமத்தப்படும் நியாயமற்ற வைதவ்யம் இவை யெல்லாம் விரைவாக ஒழிக்கப்பட்டு வருகின்றன. வைதீகக் கோட்டை உள்ளிருந்தே தகர்க்கப்பட்டு வருகின்றது. புதிதாய் ஏற்படும் சீர்திருத்தங்கள் இந்தியர்களாலேயே செய்யப்படுவதால் அவை நீடித்து நிற்கும் என்பதில் ஐயமில்லை. இவற்றைப்பற்றி மிஸ். மேயோ குறிப்பிடாதுவிட்டது வருந்தத்தக்கதே. இதிலிருந்தே அவள் சில ஆங்கிலேயரிடமிருந்து மட்டும் விஷயங்களை அறிந்திருக்க வேண்டுமெனத் தெரிகிறது. அவள் எழுதியிருக்கும் புத்தகமானது தொட்டதெல்லாம் எரிக்கும் ஒருவிதத்திராவகத்தைப் போன்றிருக்கிறது. யார் வாசித்தாலும், அவர்கள் மனத்தில் ஒருவித எரிச்சலையே அது உண்டாக்குகின்றது. அவள் ஹிந்து மதத்தைப்படித்திருப்பதாகச் சிறிதும் தெரியவில்லை. புண்ணைக் குணப்படுத்த முயலும் வயித்தியன் அறியாமையால் அதை அதிகப்படுத்துவது போலவே மிஸ் மேயோவும் தன் புத்தகத்தை ஆக்கியிருக்கிறாள். அவள் கொடுக்கும் மருந்து ஆங்கில அரசாட்சியே யாகும். அது புண்ணை அதிகப்படுத்துமேயன்றி ஒருபோதும் குணப்படுத்தாது.











## வருமானவரி இலாகா.

### நிர்வாகக் குறைகள்.

சிம்லா, ஜூ௵ ௧௨-வ

இந்திய வருமானவரி இலாகாவின் குறைகளைப்பற்றிப் பலவிடங்களிலிருந்தும் புகார்கள் அடிக்கடி வந்து கொண்டிருக்கின்றன. இந்திய சட்டசபை அங்கத்தினரான திரு. லால் சந்து நவல்ராய் இவ்விலாகாவின் வேலையைப்பற்றி, சமீபத்தில் ஆரம்பமாகும் சட்டசபைக் கூட்டத்தில் பல கேள்விகள் கேட்பார். ரெவன்யு போர்டு மெம்பர் திரு. டாட்டென்ஹாமுக்கு, பஞ்சாப் வர்த்தக சங்கம் தன் குறைகளைக் குறித்து ஓர் கடிதம் அனுப்பியிருக்கிறது. ஒரு வருமான வரி உத்யோகஸ்தரின் உத்தரவால் ஏற்படும் அப்பீல்களை சுயேச்சையான நீதி இலாகா உத்யோகஸ்தரே விசாரணை செய்யவேண்டுமென்றும், இங்கிலாந்தில் செய்யப்படுவதுபோல் முந்திய மூன்று வருடத்திய சராசரி வருமானத்தின் பேரிலேயே வரி விதிக்கப்பட வேண்டுமென்றும், குடும்பத்தின் மெம்பர்களின் தொகைக்கேற்ப குடும்பச் செலவிற்கும் பூரணத் தொகை அநுவதிக்கப்பட வேண்டுமென்றும், அப்பீல் செய்து வருமான வரியைத் திரும்பிப் பெறுகிறவர்களுக்கு மற்ற சிவில் வழக்குகளைப்போல் செலவுத் தொகை கொடுக்கப்பட வேண்டுமென்றும், தாமதித்துச் செலுத்தும் வருமான வரிக்கு அபராதம் விதிக்காது அக்காலத்திற்குள்ள வட்டிமட்டும் விதிக்கப்படவேண்டுமென்றும், அக்கடிதத்தில் குறிக்கப்பட்டிருக்கின்றன. இவ்வாட்சேபங்கள் கவனிக்கப்பட்டு, இவற்றைப் பற்றி விசாரிக்க ஓர் தனிக் கமிட்டி நியமிக்கப்படுமெனத் தெரிகிறது. (சு. மி.)

—

## அதிசய விவாகம்.

### பெண் பெண்ணை மணமுடித்தல்.

சையாம் தேசத் தலைநகராகிய பாங்காக் என்ற இடத்தில் ௩௨ வயதான நாங்ஜாய் என்ற ஸ்திரி, நாங்ஸாதாம் என்ற ௨௪ வயது பெண்ணைச் சமீபத்தில் மணந்துகொண்டாள் என்று கோலாலம்பூர்ச் செய்தி கூறுகிறது. நாங்ஜாய் ஓர் கப்பல்படை உத்யோகஸ்தரின் மனைவி. ஆனால் தன் சொந்த வேலையை முன்னிட்டு அவர் இன்னொருஊருக்குப் போய்விடவே இவள் தனியாய் வாழ்ந்துவந்தாள். அவள் வாழ்க்கையில் சந்தோஷம் ஏற்படுவதற்காக ஓர்பெண்ணை மணக்க ஆசை கொண்டு தன் தோழியான நாங்ஸாதாம் என்பவளை, அவள் பெற்றோருடைய சம்மதத்தின்பேரில் விவாகஞ் செய்து கொண்டாளாம். விவாகம சகல ஆடம்பரங்களுடனும் நடைபெற்றதென்றும், ஐந்து புத்தகுருக்கள் இதில் கலந்துகொண்டனரென்றும் தெரிகிறது. ஆனால் துரதிர்ஷ்டவசமாக சில தினங்கட்கு முன்பு ஒருவன் நாங்ஜாயைத் துப்பாக்கியால் சுட்டுக் கொன்றுவிட்டானும்.

—

## ஒத்துழைப்புக் கமிட்டி.

வங்காள சட்டசபையில் சைமன் கமிஷனுடன் ஒத்துழைக்கும் ஓர் கமிட்டி நியமிக்க வேண்டுமென்ற தீர்மானம் நிறைவேறியிருக்கிறது. சம அந்தஸ்தும், சம உரிமையும் அக்கமிட்டிக்குக் கொடுக்கப்பட வேண்டுமென்றும் கமிட்டியின் யாதாஸ்து சட்டசபையின் அபிப்பிராயத்தை அறிய ஆஜர்செய்யப்பட வேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

—

# தாயகம்.

சிட்டகாங் ஜில்லா கலக்டர் டேவிஸ் கொலை வழக்கில் எதிரியான காஜி பஸ்லூர் ரகிமானுக்கு மரணதண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது.

ஃ ஃ

மேன்மை தங்கிய வைசிராயின் மனைவி லேடி இர்வின் செப்டம்பர் ௨௦-ம் தேதி லண்டனைவிட்டுப் புறப்பட்டு அக்டோபர் ௫-ம் தேதி சிம்லா வந்து சேர்வாள்.

ஃ ஃ

பம்பாயில் நடைபெற்ற பொதுக் கூட்ட மொன்றில் சீமைச் சாமான்களைப் பகிஷ்கரிக்க வேண்டியதற்காக பிரபலஸ்தர்களடங்கிய ஓர் கமிட்டி நியமிக்கப்பட்டது.

ஃ ஃ

வாலிபக் கைதிகள் போதனா பாடசாலையிலிருந்து திரும்பும் பையன்களைக் குற்றவாளிகளைப்போல் நடத்திக் கண் காணிப்புச் செய்யக்கூடாதென கவர்ன்மெண்டார் போலீஸாருக்கு உத்தரவிட்டிருக்கின்றனர்.

ஃ ஃ

கான்பூர் முனிசிபல் போர்டு நிறைவேற்றிய தீர்மானப்படி ஜூலை ௧௨-ம் தேதியில் டவுன்ஹாலில் மூன்று வர்ணங்களடங்கிய தேசியக்கொடி பறக்கவிடப்பட்டது என கான்பூர் செய்தி கூறுகிறது.

ஃ ஃ

தேசத்தின் ராஜ்ய நிலைமையில் ஏற்பட்டுள்ள மாறுதல்களை முன்னிட்டு, கானடாவில் கூடும் ஏகாதிபத்யப் பார்லிமெண்ட் அங்கத்தினர் சங்கக் காங்கிரஸுக்குச் செல்லும் இந்தியப் பிரதிநிதிக் கூட்டத்தின் அங்கத்தினர் பதவியை பண்டித மோதிலால் நேரு ராஜினாமாச் செய்து விட்டார் என அலகபாத் செய்தி கூறுகிறது.

ஃ ஃ

கோஷா முறையை ஒழிப்பதற்காக பாட்னாவில் தீவிர பிரசாரம் நடைபெற்று வருகிறது. பல சீமான்களும், சீமாட்டிகளும் பொது ஜனங்களும் அடங்கிய கூட்டமொன்றில், கோஷா முறையை ஒழிப்பதெனத் தீர்மானிக்கப் பட்டதன்றியும், அங்கு விஜயஞ் செய்திருந்தவர்களெல்லாம் கோஷா முறையை ஒழித்துவிடுவதாகப் பிரதிக்கினையுஞ் செய்துகொண்டனர்.

ஃ ஃ

திருவாங்கூர், ஆலப்புழை சர்க்கார் பாடசாலையொன்றில் தையல் வேலை கற்பிக்கும், உபாத்தினி மோத்தன் பிலிப் என்ற வைத்தியர்மீது ௫௦௦௦ ரூபாய்க்கு நஷ்ட ஈட்டு வழக்குத் தொடுத்திருக்கிறாள். கண்ணில் ஏதோ சொற்பநோய் ஏற்பட்டிருந்ததாயும், அவ்வைத்தியரிடம் சிகிச்சைக்குச் சென்றபோது அவர் தப்பான மருந்துகளைக் கண்ணில் ஏற்றிக் குருடாக்கி விட்டதாகவும் கேஸில் குறிக்கப்பட்டிருக்கிறது.

ஃ ஃ

பெங்களூர் நகரப் போலீஸார், வெஸ்ட்எண்ட் ஹோட்டலில், சென்ற சில தினங்களாக வசித்துவந்த ஜே. ஏ. கஜதார் என்பவரைக் கைது செய்திருக்கின்றனர். அவர் நேஷனல் பாங்கிக்குச் சொந்தமான பணத்தில் அனேக லட்சம் ரூபாயை அபகரித்துக்கொண்டு மாறுவேடத்துடன் பல இடங்களில் சஞ்சரித்துக் கொண்டிருந்தாரெனச் சொல்லப் படுகிறது. போலீஸார் எதிரியிடமிருந்து நாலரை லட்ச ரூபாய் மதிப்பான கரன்ஸி நோட்டுகளையும் ரொக்கத்தையும் கைப்பற்றியிருக்கின்றார்கள் என பெங்களூர்ச் செய்தி கூறுகிறது.

பெஷவாரில், ஒரு போலீஸ் சிபாய் ஒழுங்காக வேலைபார்க்காததை மேலதிகாரிகளுக்குத் தெரிவித்த ஹெட் கான்ஸ்டபிளைத் தூங்கும் போது சுட்டுக் கொன்றுவிட்டான். அந்த சிபாய்க்கு மரணதண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது.

ஃ ஃ

பிரிட்டிஷாருக்கும் இந்தியருக்கும் சைமன் கமிஷன் விஷயத்தில் ஏற்பட்டிருக்கும் அதிருப்தியை நிவர்த்தி செய்வதற்காக கமிஷன் விஷயத்தில் சில மாறுதல்களை ஏற்படுத்த ஸர். ஜான்சைமன் சம்மதித்து விட்டாரென்று பயோனியர் பத்திரிகையின் லண்டன் நிருபர் அறிவித்திருக்கிறார்.

ஃ ஃ

வங்காள கவர்ன்மெண்டார் வங்காளக் குடிசைத்தொழில் சாமான்களையும், கைத்தொழிற் கூட்டுறவுச் சங்க சாமான்களையும் விற்கக் கல்கத்தாவில் மத்திய விற்பனைச்சாலையை ஏற்படுத்த வங்காளக் கூட்டுறவு நிர்மாண சங்கத்திற்கு ௫௦௦௦ ரூபாய் மூலதனமும் ௧௨௦௦௦ ரூபாய் கிராண்டும் கொடுக்கத் தீர்மானித்திருக்கின்றனர்.

ஃ ஃ

கோலார் தங்கவயலைச் சேர்ந்த சாம்பியன் ரீப் தங்கச் சுரங்கங்களில் வேலை செய்யும் தொழிலாளர்களில் பெரும் பாலோர் சம்பள உயர்வைக்கோரி வேலை நிறுத்தஞ் செய்திருக்கின்றனரென்றும், பாராவுக்கு விசேடப் போலீஸார் நிறுத்தப் பட்டிருக்கின்றனரென்றும், மாஜிஸ்திரேட்டின் உத்தரவுப்படி அங்குள்ள சாராய, பீர், கள்ளுக் கடைகளெல்லாம் மூடப்பட்டிருக்கின்றனவென்றும் ராபர்ட்ஸன் பேட்டைச் செய்தி கூறுகிறது.

ஃ ஃ

ஜூலை ௧௦-ம் தேதி நாபாநாள் லாகூரில் கொண்டாடப்பட்டது. அவ்வமயம் கூடிய பொதுக்கூட்டத்தில் அடியிற் கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன:—

இக்கூட்டம் மாஜி நாபா மகாராஜாவை அரசாங்கம் நடத்தும் கொள்கையைப் பலமாய்க் கண்டிக்கிறது. மகாராஜா தேசிய இயக்கத்திலும், அகாலியர் கோரிக்கைகளிலும் அநுதாபம் காட்டியதாலேயே துன்பம் அநுபவிக்கிறாரென இக்கூட்டம் முற்றிலும் நம்புகிறது.

ஃ ஃ

பூனாவை அடுத்த ஷிகார்பூர் என்னும் கிராமத்தில் பன்றிவாராதபடி காவல்புரிந்த ஒரு காவற்காரன், தோட்டத்திற்குள் காட்டுப்பன்றிகள் கூட்டமாக வந்து அட்டகாசஞ் செய்வதைக் கண்ணுற்று தன் துப்பாக்கியால் சுட்டான். அக்குண்டு அதே சமயத்தில், அடுத்துள்ள வயற்கரை வழியாய்ச் சென்றுகொண்டிருந்த மாதின் மீது தாக்கி அவளைக் கொன்றது. விஷயத்தை உடனேயே அக்காவல்காரன் போலீஸாருக்கு அறிவித்தான். அஜாக்கிரதைக் குற்றம் அவன் மீது சாட்டப்படும்.

—



## குற்றால அருவி.

### முதன்மந்திரி விஜயம்.

முதன் மந்திரி டாக்டர் சுப்பராயன் அவர்கள், திவான்பகதூர் யஸ். குமாரசாமி ரெட்டியார் அவர்களுடனும், திரு. பி. டி. ராஜன் அவர்களுடனும், ஜூலை ௧௦-ம் தேதி குற்றாலஞ் சென்றிருந்தார். அன்று காலை ௮ மணிக்கு, குற்றாலம் அருவிக்கெதிரில் ஓர் கூட்டம் கூடியது. அருவியில் குளிப்பவர்களுக்கு ஆபத்து ஏற்படாமல் தடுப்பதற்காக மேடைகட்டதாம் ஒரு திட்டம் போட்டிருப்பதாகவும், அதற்கு ௭௫௦௦ ரூபாய் செலவாகுமென்றும், அதில் ௯௫௦௦ ரூபாய் வசூலாகி விட்டதென்றும் திருநெல்வேலி கலக்டர் முதன் மந்திரியிடம் தெரிவித்தார். அருவியில் கொஞ்சநேரம் எல்லா ஜாதியாரையும் குளிக்கவிடாது தடுத்தால் சுவாமிக்கு அபிஷேகத்திற்கு நீர் எடுக்க சௌகரிய மேற்படுமென்றும், அச்சௌகரியத்தைச் செய்து கொடுத்தால் தாங்களே எல்லாச் செலவையும் ஏற்றுக்கொள்வதாகவும் கோயில் தர்மகர்த்தாக்கள் தெரிவித்தனர். இவ்விஷயத்தைக் குற்றால அருவிக் கமிட்டியின் ஆலோசனைக்கு விடவேண்டுமென கலக்டர் கூறினர். அக்கமிட்டிக்கு இவ்விஷயத்தைப்பற்றி ஆலோசிக்க அதிகாரமில்லை யென தர்மகர்த்தாக்கள் ஆட்சேபித்தனர். குற்றாலத்துக்கெனத் தனி யூனியன் போர்டு ஏற்படுத்த வேண்டுமென்றும், போலீஸ் டிப்டி சூப்பிரண்டு அதற்குத் தலைவராயிருக்க வேண்டுமென்றும், டிப்டி கலக்டர், தாசில்தார், கோயில் தர்மகர்த்தாக்கள் முதலியோர் அங்கத்தினர்களாகவிருக்க வேண்டுமென்றும் கலக்டர் அபிப்பிராயங் கூறினர். இவ்விதம் அமைப்பதால் பலனொன்றுமில்லையென ஜில்லாபோர்டு பிரசிடெண்டு அபிப்பிராயப்பட்டார். இவ்விஷயங்களைப்பற்றித் தாம் கவனிப்பதாக முதன் மந்திரி கூறிச் சென்றார். (சு. மி.)

—

## கலப்பு விவாகம்.

குண்டூர் அசிஸ்டெண்டு என்ஜினியரான திரு. ராஜகோபால் ஐயங்காரின் புதல்வி ஜானகி, குண்டூர் காட்டிலாகா உத்யோகஸ்தரான ௪௦ வயதுள்ள அப்துல்கரீம் என்னும் முகமதியரை இம்மாதம் ௭-ம் தேதி பிரமசமாஜக் கொள்கைப்படி மணந்து கொண்டாள். ஜானகி காசியிலும் டில்லியிலும் படித்து வந்தபொழுது முகமதியர்களுடன் சிநேகமாக விருந்தபடியால் அவளுக்கு ஜாதி மத பேத உணர்ச்சி அற்றுவிட்டதென்று அவள் தந்தை கூறியிருக்கிறார். கணவனும் மனைவியும் தங்கள் தங்கள் மதத்திலேயே இருப்பார்களாம்.

—

## ரயில்வேக் கட்டணக் குறைவு.

தென்னிந்திய ரயில்வே கம்பெனியார் அக்டோபர் மாதம் முதல் தேதியிலிருந்து அடியிற்கண்டவாறு கட்டணங்களைக் குறைக்கப்போவதாக அறிவித்திருக்கின்றனர். நீலகிரி சோரனூர் நீலாம்பூர் பாதையிலும் திருநெல்வேலி திருச்செந்தூர் பாதையிலும் பழைய கட்டணங்கள் மாற்றப்படவில்லை.

மெயில் வண்டி:— ௧-முதல் ௪௦௦ மைல் வரை ௪ தம்பிடிகள்; ௪௦௧-முதல் ௯௦௦ வரை ௩½ தம்பிடிகள்; ௯௦௦ மைலுக்கப்பால் மைலுக்கு ௨½ தம்பிடிகள்.

சாதாரண வண்டி:— ௧-முதல் ௫௦ மைல் வரைமைலுக்கு ௩½ தம்பிடிகள்; ௫௧ முதல் ௯௦௦ மைல்வரை ௨½ தம்பிடிகள்; ௯௦௧ மைலுக்கப்பால் ௨ தம்பிடிகள்.

—

சிதம்பரம் முனிசிபாலிட்டி.

சுவாமி சகஜானந்தம் அவர்கள் சிதம்பரம் முனிசிபாலிட்டி அங்கத்தினர்களில் ஒருவராக நியமிக்கப்பட்டிருக்கிறார்.

சயன்ஸ் காங்கிரஸ்.

௧௯௨௯-ம் வருடம் ஜனவரி மாதம் புரொபசர் வி. வி. ராமன் அவர்கள் தலைமையில் சென்னையில் கூடும்.

மிருகங்களைத் துன்புறுத்தல்.

ஒரு குதிரையைத் துன்புறுத்திய குற்றத்திற்காக ஒரு ஆங்கில நீதிபதி ஒருவனுக்கு ௫ பவுன் அபராதமும், ஒருநாள் காவல் தண்டனையும் விதித்திருக்கிறார்.

இந்திய சட்டசபை.

இந்திய சட்டசபையின் கூட்டம் செப்டம்பர் மாதம் ௫-ம் தேதியும், ராஜாங்கசபைக் கூட்டம் செப்டம்பர் பதினொன்றாம் தேதியும், சிம்லாவில் ஆரம்பமாகும்.

சைகிள் பிரயாணம்.

காசி ஹிந்து சர்வகலாசாலையைச் சேர்ந்த இருமாணவர்கள் மோடார் சைகிளில் காசியிலிருந்து புறப்பட்டு, ௬௦௦௦ மைல் தூரம் பிரயாணஞ் செய்து, ஜூலை ௬-ம் தேதி பம்பாய் போய்ச் சேர்ந்தனராம்.

இந்தியன் பாங்கி.

சென்ற ஜூன் மாதம் ௩௦-ம் தேதியோடு முடிவான அரைவருடத்திற்கு, நூற்றுக்கு பன்னிரண்டு வீதம், இந்தியன் பாங்கி, தன் பங்குதாரர்களுக்கு லாபம் பகிர்ந்து கொடுத்திருக்கிறது.

க்ஷயரோகம்.

லாகூர் நகரத்தில் மட்டும் சென்ற வருடத்தில் [illegible] பேர் க்ஷயரோகத்தால் பீடிக்கப்பட்டு உயிர் துறந்தனரென்றும், சுகாதாரமற்ற வீடுகளில் வசிப்பதே ரோகத்திற்குக் காரணமென்றும், லாகூர் முனிசிபல் சுகாதார உத்யோகஸ்தர் அறிவித்திருக்கிறார்.

ஹிந்திப்பரிசு.

உயர்ந்த ஹிந்திப்புத்தகம் எழுதுபவருக்கு வருடந்தோறும் தங்கப் பதக்கம் அளிப்பதற்காக 'சரஸ்வதி' பத்திரிகையின் மாஜி ஆசிரியரான பண்டித மகாவீர் திரிவேதி ௪௦௦௦ ரூபாய் நன்கொடையளித்திருக்கிறார்.

இளவரசி ஆசிரியை.

சமீபத்தில் [illegible] பரீட்சையில் தேறிய கொச்சி அரச குடும்பத்தைச் சேர்ந்த இளவரசி இக்காவு அம்மாள், சமஸ்தான அரச குடும்பத்துக் குழந்தைகள் வாசிக்கும், திருப்பூணித்துறை ஹைஸ்கூல் உபாத்தினியாக நியமிக்கப்பட்டிருக்கிறார்.

தற்கொலை.

ஒரு இளைஞர் மைசூர் திவானுக்கு எழுதியிருக்கும் கடிதத்தில் தனக்கு வேலைகொடுக்காவிட்டால் தற்கொலை செய்துகொள்ளப்போவதாகக் குறிப்பிட்டிருக்கிறாராம். இன்றுவரை வேலையில்லாத திண்டாட்டத்தால் தற்கொலை செய்துவிட்டதாகத் தெரிகிறது.

நாபா மகாராஜா.

எக்காரணத்தையும் சொல்லாமல், நாபா மகாராஜாவுக்குக் கொடுக்கப்பட்டுவந்த உதாரசம்பளத்தில் இரண்டாயிரம் ரூபாய் குறைக்கப்பட்டிருக்கிறதாகவும், அவர் பட்டினி கிடக்கிறாரென்றும், இந்த அவமானத்திற்கு [illegible] நாபா ராஜப்பிரதிநிதிக்குத் தந்தி அனுப்பியிருக்கிறாராம்.

ஹைக்கோர்ட் மசோதா.

ஐ. ஸி. எஸ். வர்க்கத்தாரையும் ஹைக்கோர்ட்டு ஜட்ஜுகளாக நியமிக்கலாமென்ற ஹைக்கோர்ட்டு மசோதாவைக் கண்டித்துப் பிரேரணைகள் கொண்டுவரப்போவதாக, இந்திய சட்டசபைக்கு லாலா லஜபதிராய், ஜஸ்டிஸ் மேத்தா முதலியோர் அறிவித்திருக்கின்றனர்.

ஞான உதயம்.

திரு. சீனிவாசய்யங்கார் அவர்கள் தற்சமயம் லண்டனிலிருக்கிறார். பலவிடங்களில் அவர் சொற்பொழிவுகள் நிகழ்த்தி வருகிறார். ஒரு இடத்தில் தன்னம்பிக்கையைக் குறித்துப் பேசும்பொழுது, "இந்தியர்கள் தங்கள் பலத்தைக்கொண்டே போராடவேண்டுமென்றும், வெளிநாட்டினரின் உதவியை எதிர்பார்ப்பதில் பலனில்லையென்றும், மகாத்மா சொல்லிய கூற்றின் உண்மை இப்பொழுது முன்னிலும் அதிகமாக என் புத்தியில் பட்டிருக்கிறது" எனக்கூறினார்.

# செய்தித்திரட்டு.

## விமானப் போக்குவரத்து.

பிரிட்டிஷ் பொது மக்கள் சபையில் ஒரு கேள்விக்குப் பதிலளிக்கையில், பர்ஷியா சம்பந்தமான தகராறு நிவர்த்தியாகி விட்டால், இந்தியாவுக்கு ஏப்ரல் முதல் தேதியிலிருந்து ஆகாயப் போக்குவரத்து ஏற்படுத்தப்படுமென, ஸர். ஸாமுவல்ஹோர் பதிலளித்தார் என லண்டன் செய்தி கூறுகிறது.

## பெண் கொலை.

கும்பகோணத்தில், ஒரு தோட்டிக்கும் கர்ப்பிணியான கூ வயதுள்ள அவனுடைய மனைவிக்கும் ஏற்பட்ட சச்சரவில், தோட்டி அப்பெண் வயிற்றில் கத்தியால் குத்தவே, அவள் இறந்துபோனாள். சிசுவும் உயிரற்று விழுந்துவிட்டது. விஷயம் விசாரணை செய்யப்பட்டு வருகிறது. குடியே இச்செயலுக்குக் காரணமாம்.

## கங்காணிக்குக் கடுங்காவல்.

காளி முத்து என்ற இலங்கைக் கங்காணி கிராம முனிசீப்பைப் போல் பொய்க் கையெழுத்திட்டு ஆறு மூன்று என்ற மைனரை இலங்கைக் கழைத்துச்சென்ற குற்றத்திற்காக கூ மாதக் கடுங்காவல் தண்டனை அடைந்தான். இவனைப்போல் கூ பேர்களை அழைத்துச் சென்ற இன்னொருவனுக்கும் கூ மாதத் தண்டனை விதிக்கப்பட்டது.

## பெருந்தன்மை.

வட கடலில் 'ஸிடி ஆப் பெல்பாஸ்ட்' என்ற கப்பல் மூழ்கும் நிலைமையிலிருந்தது. என்ஜினீயரைத் தவிரப் பிறரெல்லாம படகிலேறி வேறொரு கப்பலை அடைந்தனர். ஆனால் என்ஜினீயர் படகிலேறு முன், இயந்திர அறையிலிருந்த பூனையையும் படகிலேற்றுவதற்காகப் பெரும் ஆபத்தினிடையே அவ்வறையைநோக்கி ஓடினாராம்.

## குரங்கு மனிதன்.

ஒருவன் தன் மனைவியைக் கொன்றுவிட்டுத் தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்காகக் காட்டுக்கு ஓடி, வால் ஒன்றைச் செய்து குரங்குகளைப்போல் பாசாங்கு செய்து மரத்தின்மேல் வாழ்ந்து வந்தான். ஆனால் போலீஸார் அவனைப்பிடித்து இருபது வருடச் சிறைவாசத்திற்காக அந்தமான் தீவுகளுக்கு அனுப்பி விட்டார்கள்.

## மணவயதுச் சட்டம் அவசியமா?

ராவல்பிண்டி என்றவிடத்திலுள்ள பகவத்சிங் என்றவர் ஒன்பது வயதுப் பெண்ணை மணஞ் செய்துகொண்டு தன் வீட்டிற்கழைத்துப் போய்விட்டார். பெண்ணின் தாயார் அவர்மீது வழக்குத்தொடுக்க சம்மதவயதுச் சட்டத்தை மீறியதாக அவருக்குக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. ஆனால், ஹைக்கோர்ட்டில் அத்தண்டனை ரத்து செய்யப்பட்டதாம்!

## ஹௌரா ரயில் விபத்து.

ஹௌராவுக்கருகில், மேஹூர் ஸ்டேஷனுக்கும் டான்குனி ஸ்டேஷனுக்கும் இடையே சில தினங்கட்குமுன் நடுராத்திரியில் பிரயாணிகள் வண்டி விபத்தேற்பட்டது. அவ்விடத்தில் வேண்டுமென்றே ரயில்பாதை பெயர்க்கப்பட்டிருந்தது. இதனால் பதினெட்டுப் பேர் உயிர்துறந்தனர். நாற்பத்தைந்து பேருக்குக் காயமேற்பட்டது. ஒருபணக்கார வங்காளமாது தன் கைக் குழந்தையுடன் பிணமாக நின்றுகொண்டிருந்தாளாம். பாதையைப் பெயர்த்தவர்களைக் கண்டுபிடிப்பவர்களுக்கு பதினாயிரம் ரூபாய் வெகுமதி கொடுப்பதாக ரயில்வே ஏஜண்டு அறிவித்திருக்கிறார்.



## தங்கச் சுரங்கம்.

திருவண்ணாமலை தாலூக்கா, அரட்டவாடிக் கிராமத்திற்கு சமீபத்தில் ஒரு தங்கச் சுரங்கம் அகப்பட்டிருக்கிறதாம். இது கோலார் சுரங்கத்திற்கு சமமாயிருக்கலாமென நிபுணர்கள் அபிப்பிராயப்படுகின்றனர். இவ்விடத்திற்கு திருவண்ணாமலையிலிருந்து சீக்கிரம் ஓர் கிளைப்பாதை போட தெ. இ. ரயில்வே கம்பெனியார் உத்தேசித்திருக்கின்றனரென சு. மித்திரன் நிருபர் அப்பத்திரிகைக்கறிவித்திருக்கிறார்.

## சமுதாயப் பத்திரிகை.

சாலியர் வகுப்பு முன்னேற்றத்திற்கென ஓர் பத்திரிகையை நடத்த, அருப்புக்கோட்டை சாலியர் மகாஜன சங்கம் தீர்மானித்திருக்கிறது. பத்திரிகை சங்கத்தின் கிளை நிறுவப்பட்டிருக்கும் நாகர்கோவிலிலிருந்து, நாகர் கோவில் நகரசபை தலைவர் திரு. எ. நாயுடு பி. எ. பி. எல். அவர்கள் மேற்பார்வையில் வெளியிடப்படும் என அருப்புக்கோட்டைச் செய்தி அறிவிக்கிறது.

## திருவண்ணாமலை ஆலயப் பிரவேச வழக்கு.

திருவண்ணாமலை ஆலயப்பிரவேச வழக்கு சம்பந்தமாய் ஆலய அர்ச்சகர்கள் குப்புசாமி குருக்களும், ராமனுத சாஸ்திரியும் சப் டிவிஷனல் மாஜிஸ்திரேட் கோர்ட்டில் கொடுத்த அப்பீல் வழக்கில் மாஜிஸ்திரேட் ராமனுத சாஸ்திரியை விடுதலைசெய்துவிட்டு குப்புசாமி குருக்களுக்கு விதிக்கப்பட்ட கீழ்க்கோர்ட்டு தண்டனையை உறுதி செய்திருக்கிறார்.

## சுருட்டுப் புகையால் ரயில் நின்றது.

சில தினங்கட்குமுன், பெங்களூர் பாசஞ்சர் வண்டி சென்டிரல் ஸ்டேஷனைவிட்டுச் சிறிது தூரம் போவதற்குள் திடீரென நின்றுவிட்டது. விசாரணை செய்தபோது, ஒரு கம்பெனித்தாகர், பக்கத்தில் சுருட்டுக் குடித்துக் கொண்டிருந்தவரைக் குடிக்கக் கூடாதென எவ்வளவோ சொல்லியும் கேட்காததால் அபாயச் சங்கிலியை இழுத்து வண்டியை நிறுத்தினர். இது விஷயம் விசாரணை செய்யப்படும்.

## நல்ல ஜோடி.

தன் மனைவியைக் கொன்ற குற்றத்திற்காக பம்பாயிலுள்ள ஒரு நாவிதன், இருபது வருடத் தண்டனை பெற்று அந்தமான் தீவுகளுக்கு அனுப்பப் பட்டான். அங்கு அவனைப்போல், தன் கணவனைக் கொன்ற குற்றத்திற்காகச் சிறை செய்யப்பட்ட ஒரு மாதைக் கண்டு, இருவரும் காதல் கொண்டனர். மணமும் நடந்தது. தாய்நாடு திரும்பி இருவரும் சிறந்த தம்பதிகளாக வாழ்ந்து வருகிறார்களாம!

## குதிரையின் வீரம்.

அமெரிக்காவில் ஓர் ஊரில் வெள்ளப் பெருக்கெடுத்த ஒரு நதியால் பெருஞ்சேதமேற்பட்டது. ஒரு கழனியில் நீர்ப்பாயமே அங்கு மேய்ந்து கொண்டிருந்த ஒரு கிழக் குதிரையும், ஒரு இளங் குதிரையும நீரிலகப்பட்டுக் கொண்டன. இரண்டும் நீந்திக் கரைசேர முயற்சித்தன. ஆனால் கிழக் குதிரை இடையிலேயே பலமறுந்து தண்ணீரில் முழ்கவாரம்பித்தது. இளங்குதிரை அதைக்கண்டு அதன் அருகே சென்றது. உடனே கிழக்குதிரை அதன் பிடரி மயிரைக் கடித்துப் பிடித்துக்கொண்டது. இளங்குதிரை மிகவும் கஷ்டப்பட்டு நீந்திக் கரை சேர்ந்ததால், இளங்குதிரையால் கிழக் குதிரை உயிர் தப்பிறறு.



## போலீஸ் நாய்கள்.

ஜர்மனியில் நாய்கள் மிகவும் திறமையான வேலைகளைச் செய்யப் பழக்கப்படுகின்றன. அவை குற்றவாளிகளைப் பின்தொடர்ந்து கண்டு பிடிக்கின்றன. காடுகளில் அனாதையாய்க் கிடக்கும் குழந்தைகளை காப்பாற்றுகின்றன; குருடருக்குப் பட்டணங்களில் வழிகாட்டிச் செல்கின்றன; மேலும் உத்தரவிட்டால், குற்றவாளிகள் மீது பாய்ந்து விடாப்பிடியாய் பிடித்துப் போலீஸார் கையில் ஒப்புவிக்கின்றன.

## நாவிதர் வேலை நிறுத்தம்.

செய்ராஜில்லாவைச் சேர்ந்த ஓர் கிராமத்தில் அதிகக் கூலியைநாடி, நாவிதர் வேலை நிறுத்தஞ் செய்திருக்கின்றனர். கிராம ஜனங்கள் அவர்களைப் பகிஷ்கரித்துவிட்டு வெளியூர் நாவிதர்களை வரவழைக்கத் தீர்மானித்தனர். ஆனால் வெளியூர்களிலிருந்து வேறு நாவிதர் வந்து வேலை செய்யாமலிருக்கும்படியும், அவ்வூர் நாவிதர் தீவிர வேலை செய்கின்றனர். ஜனங்கள் பெரிதும் திகைக்கின்றனர் எனத் தெரிகின்றது.

## மணந்தவன் மாண்டான்.

சென்ற வாரம், ஒரு ஐம்பது வயதுக் கிழவன் ஓர் இளம்பெண்ணை மணந்து, மணந்தவன்றே உயிர் துறந்தானென்ற செய்தி அறிவிக்கப்பட்டது. போலீஸார் விசாரணை செய்து அவன் இயற்கை மரணத்தாலேயே மாண்டதாக முடிவுகட்டினர். எனினும் பெண்ணின் பெற்றோர்கள், விதவையின் ஜீவனத்திற்கு வழி செய்யாவிட்டால் பிணத்தை எடுக்கக்கூடாதெனத் தடுக்கவே, அவளுக்கு ௮௦௦ ரூபாய் கொடுப்பதென முடிவு செய்யப்பட்டது.

## உடன் பிறந்தே கொல்லும் வியாதி.

கண்ணனூரை அடுத்த கிராமவாசிகளான இருபெண்கள் சில தினங்கட்கு முன் பள்ளிக் கூடத்திற்குச் செல்லும்போது அவர்களுடன் துணையாகச் சென்ற அவர்களது சகோதரனே, அவர்கள் அணிந்திருந்த காப்பு முதலியவற்றையும் சங்கிலியையும் அறுத்துக்கொண்டு ஓடிவிட்டானும். அவை மொத்தத்தில் ௬ பவுன் எடை உள்ளனவாம். போலீசார் விசாரணை செய்து வருகின்றனர். 'உடன் பிறந்தார் சுற்றத்தார் என்றிருக்கவேண்டா!'

## செய்நன்றியறிதல்.

ஆங்கிலேயர் பலர் தம் நன்றியறிதலை மிகவும் விசேடமாகத் தமது மரண சாசனங்களில் காட்டுகிறார்கள். ஒருமாது, தன் சமையற்காரனுக்கு ௪௦௦௦ பவுனும், தன் தோட்டக்காரனுக்கு ௫௦ பவுனும் மற்ற வேலைக்காரர்களுக்கு ௧௯௫௦ பவுனும் விட்டுவிட்டுப் போயிருக்கிறாள். தனது மகள் நோயுற்றிருக்கும்போது சிகிச்சை செய்த தாதிக்கு இன்னொரு மாது ௪௫௦ பவுன் விட்டிருக்கிறாள். மாலியாபாரத் தரகுகாரன் ஒருவன் தனக்குள்ள பெரும் ஆஸ்திகளெல்லாவற்றையும் ஆஸ்பத்திரிக்கு விட்டுப் போயிருக்கிறான்.

## முதுகைக்காட்டும் மரியாதை.

கதியவாரிலுள்ள ஒரு சிறிய துறைமுகப் பட்டணமாயிருக்கும் மங்ரோல் ஒயி சுதேச சமஸ்தானத்தின் தலைநகரம். இது 'ஷேக் சாகிப்' என்னும் நவாபின் ஆட்சிக்குட்பட்டது. சமஸ்தானுதிபதி சமீபத்தில் ஓர் உத்தரவிட்டிருக்கிறார். சமஸ்தானுதிபதி வீட்டுப் பெண்களின் மூடு வண்டிகள் நகர ரஸ்தாக்கள் வழிச்சென்றால் நகரவாசிகள் எழுந்து நின்று சலாம் செய்வது வழக்கம். ஆனால் இது மதத்திற்கு விரோதமாயிருப்பதால், இனி ஆடவர் எழுந்து நின்று தங்கள் முதுகைத் திருப்பிக் கொள்ள வேண்டுமென்று அவ்வுத்தரவில் குறிக்கப்பட்டிருக்கிறதாம்.

## கால்நடைப் பிரயாணம்.

வில்லியம் உல்ப் என்ற அமெரிக்கப் போர்வீரர், உலகச் சுற்றுப்பிரயாணத்தை முன்னிட்டு, கொளும்பிலிருந்து சில தினங்கள்முன் சென்னைக்கு வந்தார். கால்நடையாக ஏழுவருடகாலத்தில் ஒரு லட்சம் மைல் நடந்து உலகத்தைச் சுற்றிவர வேண்டுமென்பது அவர் நோக்கம். ௧௯௨௫-ல் அவர் லிஸ் ஆங்கிள்ஸிலிருந்து புறப்பட்டு இதுவரை அறுபத்துமூவாயிரம் மைல் தூரம் பிரயாணஞ் செய்திருக்கிறார். இன்னும் மூன்று வருடத்திற்குள் தன் பிரயாணத்தை முடிக்கவேண்டு மென்பது அவர் கொள்கை. மெக்ஸிகோ, கானடா அமெரிக்கா, தென்னிந்தியத் தீவுகள் நியூஸிலண்டு, ஆஸ்திரேலியா, நியுகினியா பிலிப்பைன்ஸ், ஜப்பான், சைபீரியா, சைனா சயாம், மலேயா, ஜாவா, ஸிலோன் இந் நாடுகளுக்கெல்லாம் அவர் சென்று திரும்பி விட்டார்.



# பர்தோலிப் போர்.

மாஜிஸ்திரேட் அறிக்கை:— கவர்ன்மெண்டுக்கு கிஸ்தி செலுத்தத்தவறியதற்காகப் பறிமுதல் செய்யப்பட்ட நிலங்களில் பறிமுதலுக்குப் பின் நிலத்தின் ஆதி சொந்தக்காரர்களுக்குப் பாத்தியதையில்லை யென்றும், ஆசையால் அவற்றில் சாகுபடி செய்பவர் அதனால் ஏற்படும் பலாபலன்களுக்குப் பொறுப்பாளி யாவார்களென்றும் சூரத் ஜில்லா மாஜிஸ்திரேட் அறிவித்திருக்கிறார்.

கலெக்டர் நோட்டீஸ்:— ராஜினாமாச் செய்த பர்தோலித் தாலூகாக் கர்ணங்களை ஜூலை ௧௪-ம் தேதி தம் ஆபீஸில் ஆஜராகி வேலையினின்றும் ஏன் நீக்கக் கூடாதென்பதற்குக் காரணங்காட்டும்படி சூரத் ஜில்லா டிப்டி கலக்டர் ஓர் அறிக்கை வெளியிட்டிருக்கிறார்.

தாலாட்டியின் பதில்:— கலக்டர் விடுத்த அறிக்கைக்கு ஒரு தாலாட்டி அடியில் வருமாறு பதிலளித்திருக்கிறார்: "சென்ற இருபத்திரண்டு வருடகாலமாக சர்க்காரின் கீழ் நான் வேலை செய்து வந்தும் ஒரு தடவை கூட மேலதிகாரிகளின் கண்டனத்திற்காளாகவில்லை. இவ்வித அவமரியாதையான கடிதத்தை நீங்கள் வரைந்திருப்பதற்கு வருந்துகிறேன். ஒத்துழையாமை காலத்திலும் நான் சர்க்காருக்கு பக்தியுடனேயே உழைத்து வந்தேன். ஆனால் யோக்கியப் பொறுப்புள்ளவர்கள் இனி உத்யோகத்தில் இருப்பது சாத்தியமில்லை. கவர்ன்மெண்டார் தற்போதைய முறைகளை இன்னும் அனுஷ்டித்து வந்தால் தாலாட்டி வேலைக்கு ஒருவர்கூட வரமாட்டார்கள். ஆகையால் நான் உண்மையை வெளியிட்டு அரசாங்கத்திற்கு நன்மையே செய்திருக்கிறேன். வேலையைவிட்டு விலக்கி விடுவதே உத்தமம். உங்களுடைய கண்ணில் விழித்து சமாதானம் சொல்ல எனக்கிஷ்டமில்லை. எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருக்கும் கடவுளுக்கு, நான் ராஜத்துரோகியா வென்பதும், நீங்கள் ராஜத்துரோகியா யென்பதும் தெரியும்."

ராஜப்பிரதிநிதி பேட்டி:—பர்தோலி நிலைமையைப்பற்றி ராஜப்பிரதிநிதியுடன் கலந்து யோசிப்பதற்காக பம்பாய் கவர்னர் ஜூலை ௧௬-ந் தேதி சிம்லாவுக்குப் பிரயாணமானர்.

மகாநாடு:—ஜூலை ௧௫-ந்தேதி ஆமதாபாத் ஜில்லா மகாநாடு கூடியது. அவ்வமயம் இந்தியா சட்டசபை அங்கத்தினரான திரு. என். ஸி. கேல்கார் தலைமை வகித்தார். விவசாயிகள் நியாயமான கோரிக்கைகளுக்காக சாத்வீக எதிர்ப்பை ஆரம்பித்திருக்கின்றனர். இப்போராட்டத்தில் அவர்கள் தோல்வியுற்றால் அது அவர்களுக்கு மட்டும் அவமானத்தை உண்டாக்காது. ஆகையால் யாவரும் ஊக்கத்துடன் அவர்களுக்குத் துணைபுரிய வேண்டுமென அவர் கேட்டுக்கொண்டார்.

படேலின் சபதம்:—தலைவர் உரை முடிவுற்றதும் வல்லபாய் படேல் பேசியதாவது:— பர்தோலியில் துப்பாக்கிப் பிரயோகம் செய்துபார்க்கும்படி கவர்ன்மெண்டாரை அழைக்கிறேன். பர்தோலி விவசாயிகள் தங்கள் மார்பில் குண்டுகளை ஏற்க வேண்டுமேயன்றி முதுகில் ஏற்கக்கூடாது. எந்த கவர்ன்மெண்டும் பலாத்காரத்தைக் கொண்டு ஆட்சிசெய்யமுடியாது. பர்தோலி விவசாயிகள் வேண்டுவது புனர் விசாரணையே. இக்கோரிக்கையைப் பூர்த்தி செய்யாவிட்டால், நிலவரி கொடுப்பதைவிட உயிர்துறப்பதே மேல். இந்தியர்கள் இறக்கக் கற்றுக்கொண்டால்தான் சுயராஜ்யம் கிடைக்கும். விவசாயிகள் சுயமரியாதையை இழப்பதைவிட இப்போராட்டத்தில் உயிர்துறப்பர்.

இளைஞர் ஊக்கம்:—ஜூலை ௧௨-ம் தேதி இளைஞர் பர்தோலி தினத்தைக் கொண்டாடினர்கள். அன்று இருபத்தையாயிரம் ரூபாய்க்கு மேல் பர்தோலி நிதிக்காகத் திரட்டப்பட்டது. பல இடங்களில் கூட்டங்கூடி அவர்கள் பிரசங்கங்கள் நிகழ்த்தினர்; புத்தகங்கள் விற்றனர். சூரத், ஆமதாபாத் இளைஞர் லீக் களும் இவ்விதஞ்செய்ய முன்வந்திருப்பது போற்றத்தக்கது. பூனாவிலுள்ள விவசாயக் கல்லூரி மாணவர்களும் பர்தோலி தினத்தைக் கொண்டாடி நிதிதிரட்டி வருகின்றனர்.

# அடிகளின் உண்மைவாழ்வு.

பகுதி ரு.

அத்தியாயம் ௧௩.

மௌலானா மஸ்ஹருல் ஹாக் வக்கீல் தொழிலுக்கு லண்டனில் படித்துக்கொண்டிருக்கும் பொழுது அவருக்கு நானறிமுகமானேன். ௧௯௧௫-ல் நடைபெற்ற பம்பாய் காங்கிரஸில்—அவ்வருடத்து முஸ்லிம் மகாநாட்டிற்கு அவர் தலைவர்— நான் அவரை சந்தித்தபோது, எனது அறிமுகத்தைப் புதிப்பித்து, நான் பாட்னா போக நேரிட்டபோதெல்லாம் தன்னுடன் தங்கிப்போம்படி அவர் என்னை அழைத்தார். இவ்வழைப்பை ஞாபகப்படுத்திக்கொண்டு, எனது வருகையின் அவசியத்தைக் குறித்து அவருக்கறிவித்தேன். உடனேயே அவர் தனது மோட்டார் வண்டியில் வந்து தனது விருந்தாளியாயிருக்கும்படி வற்புறுத்தினர். அவருக்கு நன்றி செலுத்திவிட்டு முதலாவது கிடைக்கக்கூடிய ரயில்வண்டியில் என்னை ஏற்றி வழியனுப்பும்படி அவரை வேண்டினேன்; என்னைப்போன்ற ஒரு அன்னியனுக்கு 'ரயில்வே கைட்' ஒரு உதவியு மளிக்கவில்லை. ராஜகுமார் ஷுக்லா வுடன் அவர் பேசி, நான் முதலாவதாக முஸபர்பூருக்குப் போகவேண்டுமென அபிப்பிராயப்பட்டார். அன்று மாலையில் அவ்வூருக்கு ஒரு வண்டி போனபடியால் அதில் ஏற்றி என்னை அனுப்பினர்.

பிரின்ஸிபால் கிரிபழனி அப்பொழுது முஸபர்புரியிலிருந்தார். நான் ஹைதராபாத்துக்குச் சென்றிருந்ததுமுதல் அவரை அறிந்திருந்தேன். அவரது பெரிய தியாகத்தைப் பற்றி டாக்டர் சோயித்ராம் எனக்குக் கூறியிருந்ததுமன்றி, பண்டித கிரிபழனியின் பொருளுதவியால் டாக்டர் சோயித்ராம் நடத்தும் ஆசிரமத்தைப்பற்றியும் அறிவித்தார். அவர் முஸபர்புரியிலுள்ள அரசாங்கக்கல்லூரியில் ஒரு பண்டிதராயிருந்தார். நான் அங்குபோனதற்குச் சற்று முன்புதான் அவர் தனது வேலையை ராஜிநாமாச் செய்திருந்தார். எனது வரவைப்பற்றி அவருக்கு ஒரு தந்திச் செய்தி அனுப்பியிருந்தேனாதலால், வண்டி நடுராத்திரியில் அங்கு சேர்ந்தபொழுதும் மாணவர்குழுவோடு அவர் என்னை வண்டி நிலையத்தில் சந்தித்தார். அவருக்குச் சொந்தமான அறைகளில்லை; பண்டித மால்கனியோடு அவர் வசித்துவந்ததால், நான் பின்னவருக்கே விருந்தாளியானேன். ஒரு அரசாங்கப் பண்டிதர் என்னைப்போன்ற ஒருவருக்கு இடந்தருவது அந்நாட்களில் ஒரு சாதாரணமான காரியமல்ல.

பீஹாரின் ஆபத்தான நிலைமையைப் பற்றி பண்டித கிரிபழனி எனக்குக் கூறினர். திருகூட டிவிஷனைப்பற்றியும், எனது வேலையின் கஷ்டத்தைப்பற்றியும் அவர் சிறப்பாக எனக்கு விளக்கினர். பீஹார் வாசிகளோடு அவர் நெருங்கிப்பழகியிருந்தபடியால், நான் பீஹார் சென்றதின் நோக்கத்தை அவர்கட்கு முன்னாலேயே தெரிவித்துவிட்டார். காலையில் சிறு ஒரு வக்கீல் குழாம் என்னைப்பார்த்தது. அவர்களில் ஒருவரும், தனது உண்மை ஊக்கத்தால் அக்கறையுடன் என்னிடம் வேண்டிக் கொண்டவருமான ராமநவமி பிரசாதை நான் இன்னும் மறக்கவில்லை. "இவ்விடத்தில் (பண்டித மால்கனியின் ஜாகை) நீங்கள் நினைத்துவந்திருக்கும் வேலையைச் செய்யமுடியாது. எங்களில் ஒருவர்கூட வந்து நீங்கள் தங்கவேண்டும். இவ்விடத்தில் கயாபாபு ஒரு பிரபல வக்கீல். அவரது சார்பாக உங்களை அவர்கள் ஜாகைக்கு வரவேற்கவே நான் வந்திருக்கிறேன். கவர்ன்மெண்டுக்கு நாங்களெல்லாரும் பயப்படுகிறோம் என்பதை நான் வெளியிடுகிறேன்; எனினும், எங்களாலியன்ற உதவியைச் செய்கிறோம். ராஜகுமார் ஷுக்லா கூறிய விஷயங்களில் பெரும்பாலனவையும் உண்மையானவையே. எங்கள் தலைவர்கள் இன்று இங்கில்லாதிருப்பது வருந்தத்தக்கதே. எனினும், பாபு விராஜகிஷோர் பிரசாதுக்கும், பாபு ராஜேந்திர பிரசாதுக்கும் நான் தந்தி அனுப்பி இருக்கிறேன். அவர்கள் அதிவிரைவில் வந்து சேர்வார்களென எதிர் பார்க்கிறேன்; நீங்கள் வேண்டும் விஷயங்களெல்லாவற்றையும் அவர்களால் உறுதியாக அறிவிக்கமுடியும்; அன்றியும் அவர்கள் உங்களுக்குப் பெரும் உதவி புரிவார்கள். தயவு செய்து கயா பாபுவின் ஜாகைக்கு வாருங்கள்" என அவர் வேண்டிக் கொண்டார்.

இது ஒரு மறுக்கமுடியாத வேண்டுகோள்; கயாபாபுவை உபத்திரவப்படுத்த வேண்டி வருமெனச் சிறிது தயங்கினேன். ஆனால் அவர் தெளிவுபடுத்தியதால், அவரோடு தங்கப்போனேன். அவரும் அவரைச் சார்ந்தோரும் என்மீது அன்பு மாரி பொழிந்தனர்.

அசமயம், தர்பங்காவிலிருந்து விராஜகிஷோர் பாபுவும், பூரியிலிருந்து ராஜேந்திர பாபுவும் வந்து சேர்ந்தார்கள். விராஜகிஷோர் பாபு என்பவர் நான் லக்னோவில் சந்தித்த விராஜ கிஷோர் பிரசாத் பாவு அல்ல. அவரது பணிவுடைமை, எளிமை, நற்குணம், விசேடபற்று இவற்றால் அவர் என் மனத்தை உருக்கி விட்டார். இக்குணங்கள் பீஹார் வாசிகளுக்குச் சிறப்பாதலால், என்மனம் மகிழ்ச்சியுற்றுப் பொங்கிற்று. பிஹார் வக்கீல்கள் அவருக்குக் கொடுத்த மதிப்பு எனக்குத் திருப்தியான ஆச்சரியத்தைத் தந்தது.

இந் நண்பர் குழாத்துடன் வாழ்வு முற்றும் நட்புரிமை பாராட்டக் கடமைப்பட்டுள்ளேனென அதி சீக்கிரத்தில் உணர்ந்தேன். கேஸின் விஷயங்களைப்பற்றி விராஜ கிஷோர் பாபு எனக்கு அறிவித்தார். எளிய குடிக்கூலிக்காரர்களின் வழக்கை எடுத்துக்கொள்வது அவருக்கு வழக்கம். நான் போயிருந்தபொழுது அங்கு அத்தகைய வழக்குகள் இரண்டிருந்தன. அவ்வித வழக்குகள் ஒன்றில் அவர் ஜயித்துவிட்டால், அந்த எளிய ஜனங்கட்கு அவர் கொஞ்சம் நன்மை செய்ததாகத் தன் மனதை சமாதானப்படுத்திக் கொள்வது வழக்கம். இவ்வெளிய ஜனங்களிடமிருந்து அவர் சம்பளம் பெற்றுக்கொள்ளவில்லையென்றல்ல; சம்பளம் பெற்றுக்கொள்ளாவிட்டால், தங்களது குடும்பத்தை நடத்த ஒன்றுமில்லாமற் போய்விடு மென்றும், பாவப்பட்ட மக்களுக்கு ஒரு உதவியுஞ் செய்ய முடியாமற் போய்விடு மென்றும் வக்கீல்கள் நம்பி வேலை செய்கிறார்கள். அவர்கள் ஏற்படுத்திய கூலிகளும், வங்காளத்திலும் பீஹாரிலும் உள்ள ஒரு பாரிஸ்டரின் சம்பள அளவும் என்னைத் திடுக்கிடச் செய்தன. 'இன்னாரின்னாருடைய அபிப்பிராயத்திற்காக நாங்கள் பதினாயிரம் ரூபாய் கொடுத்தோம்' என எனக்குக் கூறப்பட்டது. நான்கு சங்கிகளுக்குக் குறைந்த தொகை ஒரு கேஸிலுமில்லை. அன்புடன் நான் கூறிய கண்டனையை எனது நண்பர்கள் கவனித்துக்கேட்டனர்; ஆனால் என்னை மாறுபாடாக எண்ணவில்லை.

"இந்த வழக்குகளைப்படித்து விட்டு நீதி மன்றங்கட்குப் போவதை நாம் நிறுத்த வேண்டுமென்ற முடிவிற்கு வந்திருக்கிறேன். இவ்வழக்குகளை கோர்ட்டுகளுக்குக் கொண்டுபோவதால் ஒரு பலனுமில்லை. விவசாயிகள் எங்கு நசுக்கப்பட்டு பயமுற்றிருக்கின்றனரோ, அங்கு கோர்ட்டுகளால் பிரயோஜனமில்லை. பயமில்லா திருப்பதே அவர்களுடையும் உண்மையான விடுதலை. திங்காதியா முறை பீஹாரிலிருந்து ஒழிக்கப்படுவதுவரை நாம் சும்மாயிருக்க முடியாது. இங்குவிட்டு இரண்டு நாட்களில் போய்விடலாமென நான் நினைத்திருந்தேன், ஆனால் இவ்வேலை இரண்டு வருடங்கள் கூட யெடுக்குமென இப்பொழுது உணர்கிறேன். அவசியப்பட்டால் அவ்வளவு நேரத்தைச் செலவு செய்யவும் நான் தயாரா யிருக்கிறேன்; ஆனால் உங்கள் உதவியை நாடுகிறேன்' எனக் கூறினேன். விசேடமாக விராஜகிஷோர்பாபு சாந்தமாக யிருந்தார், 'எங்களாலியன்ற உதவியை நாங்கள் செய்கிறோம். ஆனால் நீங்கள் எத்தகைய உதவியை நாடுகிறீர்களெனக் கூறுங்கள்' என அவர் சமாதானமாகக் கேட்டார். இவ்விதமாக நள்ளிரவுவரை நாங்கள் பேசிக்கொண்டிருந்தோம். 'உங்கள் சட்ட ஞானத்தால் எனக்கு ஒரு பிரயோஜனமுமில்லை. மொழிபெயர்ப்பதிலும் குமஸ்தா வேலையிலும் எனக்கு உதவிவேண்டும். சிறைவாசஞ்செய்ய வேண்டிய அவசியமும் நேரலாம். ஆனால் அத்தகைய தணிவுக்குப் போகவேண்டுமென நான் விரும்பினாலும், உங்களுக்கு எவ்வளவுதூரம் போகலாமென உணர்கிறீர்களோ அவ்வளவு போனால் போதுமானது. முடிவற்ற காலத்திற்கு உங்கள் வேலையைவிட்டு குமாஸ்தாக்களாக நீங்கள் மாறுவதே சாமான்யகாரியமல்ல. இங்கு பேசக்கூடிய ஹிந்தியை உணர்வது எனக்குக் கஷ்டமாக யிருக்கிறது. மேலும், கெய்தி உருது இவைகளில் எழுதப்பட்ட பத்திரிகைகளையும் என்னால் வாசிக்க முடியாது; எனக்காக நீங்கள் அவற்றை மொழிபெயர்க்க வேண்டுகிறேன். இவ்வேலைக்காக நாம் சம்பளங்கொடுக்க முடியாது. அன்பை முன்னிட்டும், ஊழியத்தின் மேலுள்ள ஊக்கத்தாலுமே அவை செய்யப்பட வேண்டும்' என நான் அவர்களிடம் கூறினேன்.

விராஜகிஷோர் பாபு என்னை உடனேயே அறிந்துகொண்டார்; என்னையும், அவரது சகாக்களையும் முறைமுறையாகக் குறுக்குக் கேள்விகள் கேட்டார். நான் கூறிய எல்லாவற்றினுடையவும் உட்பொருளைத் திட்டப் படுத்த அவர் முயன்றார். அவர்களுடைய தொண்டு எவ்வளவு காலத்திற்கு அவசியப்படும்; எத்தனை பேர் வேண்டும்; அவர்கள் முறையாகத் தொண்டுசெய்தால் போதுமா; என்ற கேள்விகள் கேட்கப்பட்டன. பின் வக்கீல்களைப் பார்த்து அவர்களது ஊழியத்தின் அளவைப்பற்றி வினவினர். 'எங்களில் இத்தனைபேர், நீங்கள் குறிக்கும் எதையும் செய்யத்தயாராயிருக்கிறோம். நீங்கள் விரும்பும் காலம்வரை எங்களிற் சிலர் உங்கள்கூட இருப்பார்கள். சிறை செல்லுவதென்ற கொள்கை எங்களுக்குப் புதுமையானது. அதைக்கொள்ள நாங்கள் முயற்சிப்போம்' என அவர்கள் உறுதிகூறினர்.

# வேலை நிறுத்தம்.

தொழிலாளர் சங்க மத்தியக் கமிட்டித் தலைவர் ஜூலை ௧௩-ம் தேதி ஏஜண்டுக்கு ஒரு கடிதம் அனுப்பியிருக்கிறார். அதில் கீழ்த்தரச் சிப்பந்திகளின் சம்பளத்தை உடனே உயர்த்தவேண்டுமென்றும், அல்லது சுமார் ஒருமாதத்திற்குள்ளாக உயர்த்துவதாகச் சுற்றறிக்கை வெளியிட வேண்டுமென்றும், இன்றேல் இம்மாதம் ௨௦-ம் தேதி பொதுவேலை நிறுத்தஞ் செய்யப்படுமென்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

பலஇடங்களிலும் தொழிலாளர் பொதுக் கூட்டங்கள்கூடி தொழிலாளர் கஷ்ட நிவாரண நிதிக்காகப் பணம் வசூலிக்கின்றனர். தொழிலாளர் சங்கத்தலைவர் அனுப்பிய கடிதத்திற்கு ஏஜண்டு பதில் விடுத்திருக்கிறார். அதில் சம்பள உயர்வு கொடுக்கப்படாதென்றும், பொதுவேலை நிறுத்தத்தால் தொழிலாளருக்கும் ஜனங்கட்கும் துன்பம் ஏற்படுமென்றும் குறித்திருக்கிறார். ௨௦-ம் தேதியன்று பொதுவேலை நிறுத்தம் செய்ய வேண்டிய அவசியமிருப்பதால் பொதுஜனங்கள் பிரயாணஞ் செய்வதையும் சாமான்கள் அனுப்புவதையும் நிறுத்திக் கொள்ள வேண்டுமென திருச்சி மத்தியக்கமிட்டித் தலைவர் அறிவித்திருக்கிறார். வேலை நிறுத்தப் பிரசாரம் தீவிரமாகச் செய்யப்படுகிறது.

# கோயில் நுழைவு.

## வக்கீல் நோட்டீஸ்.

ஜூலை ௧-ம் தேதி சென்னை, திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தசாரதி கோவிலில் தரிசனத்திற்குச் சென்ற திரு. என். தண்டபாணி பிள்ளை முதலியவர்களைத் தடுத்து கோவில் கதவை அடைத்ததற்காக, கோவில் டிரஸ்டிகளுக்கு திரு. தண்டபாணி பிள்ளை வக்கீல் நோட்டீஸ் கொடுத்திருக்கிறார். திரு தண்டபாணி பிள்ளையும் ஏனையோரும் கோவிலுக்குள் நுழைய முயன்றபொழுது ராமானுஜாச்சாரி, பாஷ்யம் ஐயங்கார் என்ற இருவர்களும் கோவில் கதவுகளை மூடினர்களென்றும், அவர்கள் டிரஸ்டிகளின் உத்தரவுப்படி நடந்துகொண்டனரா அல்லது தாமாகச் செய்தனரா வென்பதை இரண்டு தினங்கட்குள் அறிவிக்காவிட்டால், அவர்கள் மீது கிரிமினல், சிவில், இவ்விருவழிகளிலும் நடவடிக்கை பெடுத்துக் கொள்ளப்படுமென்றும் அந்த நோட்டீஸில் குறிக்கப்பட்டிருக்கிறது.

நாளென் செயும்! வினைதானென் செயும்! எனைநாடி வந்த
கோளென் செயும்! கொடுங்கூற் றென் செய்யும்! குமரேசரிரு
தாளும் சிலம்பும் சதங்கையும் தண்டையும் ஷண்முகமும்
தோளும் கடம்பும் எனக்கு முன் னேவந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

குமரன், காரைக்குடி,
விபவ - ௵ ஆடி - ௴ ச - உ

## குருகுல வாழ்க்கை.

மாசு மறுவற்று இன்ப உருவாகப் பிறந்திருக்கும் பச்சிளங் குழந்தைகளின் உள்ளம் பளிங்குபோல கள்ளங் கபடற்றிருக்கிறது. பொய்யும் பொருமையுமில்லை. வஞ்சம் கொடுமையும் அக்குழந்தைகளின் உளத்தைப்பற்றி நிற்கவில்லை. புதிதாகப் பிறந்து தொட்டிலிற் கிடக்கும் தூய குழந்தைகள் நாளுக்கு நாளாக வளர்ந்து உலகிற் புகுகின்றன. நன்மை தீமையறியாது விளையாடி வளரும் குழவிகள் சார்ந்ததைப்பற்றி வளர்வதியற்கையாதலால் அவற்றைச் சார்ந்துநிற்கும் பொருள்களையும், வாழ்க்கை முறைகளையும், மக்களையும் பொறுத்தே அவர்களின் குணங்கள் பெரும்பாலும் அமைகின்றன. தற்கால இந்து குடும்பங்களிலுள்ளார் குழந்தைபெறப் பெருவிழைவு கொள்கின்றனர். பரிகாரங்கள் செய்தலும் நோன்பியற்றலும் கொஞ்சமல்ல. ஆனால் குழந்தைகள் பிறந்தால் அவற்றைச் சீர்பெற வளர்க்கும் நெறியினைக் கவனிக்கவில்லை. பொருளற்ற வழக்கங்களைக் கைவிட முடியாமல் அல்லற்படுந் தாய் தந்தையரைச் சார்ந்து குழந்தைகள் பழக்க முறுகின்றன. துன்பம் துன்பமென்று கதறிக்கொண்டே பல காரியங்களை வெட்டி விழ்த்தமுடியாத நிலையில் வெறுத்த மனமும் சிரித்த முகமுங்கொண்டு பலர் செய்துவருவதைக் காண்கிறோம். வாழ்வினைத் துன்பக்கடலுள் ஆழ்த்திவரும் கொடு வழக்கங்கள் பலவும் கையாளப்படுகின்றன. இம்மாதிரியான பண்ணற்ற செயல்களையிற்றும் மக்களுடன் பயின்று வளரும் இளங் குழவிகள் இத்துன்பங்களைவிட்டு நீங்கமுடியாதபடி கட்டுப்பட்டுவிடுகின்றன.

சிற்சில தாய் தந்தையர் தங்கள் குழந்தைகளை நல்லவழியில் பழக்க வேண்டுமென்றெண்ணிப் பல வேலையாளரை ஏற்படுத்திப் பெரும்பொருளைச் செலவுசெய்து வளர்க்க முயல்கின்றனர். எனினும் ஜாதிக்கட்டுகளும் சடங்குகளும் மூடவழக்கங்களும் அவர்களுடைய முயற்சியினை உடைத்தெறிய முன்னிற்பதைக் காண்கிறோம். இப்போதிருக்கிற அளவுமுன்னில் வாழ்க்கையில்லை கெட்டிருக்கவில்லையாயினும் குழந்தைகளை ஐந்தாண்டுகட்குப் பின்னர் வீடுகளினின்றும் வேறுபடுத்திக் குருகுலங்களில் விட்டுப் படிப்பித்தன ரென்பது குறிப்பிடத்தக்கதாகும். சிறு பருவத்தில் பலகுழந்தைகள், கல்வியையும் அறிவையும் பெறும் நோக்கத்தோடு அமைக்கப் பெற்றுள்ள குருகுலங்களில் பயில்வது பெரும் பயனளித்தல் கூடும். இம்முறையானது காலக்கிரமத்தில் கவனிப்பாரின்றி அழிந்து விட்டதென்னலாம். மீண்டும் இம்முறையானது போற்றப்படுமானால் நந் தமிழ்நாட்டுக் குழந்தைகள் நல்வாழ்வு பெறுதல் கூடும். சுவாமி சிரத்தானந்தர், மகாத்மா காந்தி, ரவீந்திரர் முதலியோர் ஆசிரமங்கள் கண்டு மக்கள் வாழ்வை இளம்பருவத்திலிருந்தே செப்பஞ் செய்ய முயன்று வருகின்றனர். மேனாடுகளில் இம்மாதிரியான குருகுலங்கள் பல விருப்பதாக அறிகிறோம். இம்முறையை ஒருவாறு தழுவியே பள்ளிக்கூடங்களில் சாப்பாட்டு விடுதி அமைக்கும் வழக்கமும் கையாளப்படுகிறதென்னலாம்.

நமது தமிழகத்தில் காலஞ்சென்ற வ. வெ. சு. ஐயர் சேரமாதேவியில் ஒரு குருகுலத்தைக் கண்டார். அம்முயற்சி பெரும்பயனுடையதெனவே பல அறிஞரும்கருதினர். பொதுஜனங்களும் பொருளுதவிசெய்ய முன் வந்தனர். குழந்தைகளையும் அவரிடம் ஒப்புவித்தனர். அங்கு நடைபெற்ற வேற்றுமை யுணர்வால் அக் குருகுலம் பட்டொழிந்தது. நேரிய வழியில் பிள்ளைகளைப் பயிற்றும்படியான குருகுலங்கள் தமிழ்நாட்டில் காணப் பெறுதல் அவசியமாகும். தமிழகத்தில் குருகுலங்கண்டு அதனைச் செவ்வையாக நடத்தக்கூடிய அன்பர் சிலரே இருக்கின்றனர். அவர்கள் இத்துறை நண்ணுவாராயின் தமிழக மக்கள் எதிர்காலத்தில் பெரும்பயனை அடைவர். தமிழ்நாடு மேன்மையுற வேண்டுமானால் தமிழ்நாட்டில் பிறக்குங் குழந்தைகளின் அறிவும் ஒழுக்கமும் பாதுகாக்கப்பெற வேண்டும். அவற்றை வேலியிட்டு வளர்க்கத்தக்க இடம் குருகுலமே யாகுமென்பதை நாம் மறந்துவிடலாகாது. பிள்ளைகளைப் பெற்றுள்ள அன்பர்கள் அவர்களைச் சிறந்த மக்களாக்குதற்கு முயல்தல் இன்றியமையாததாகும்.

—

## எண்டிசைக் காட்சி.

### தற்கோலை.

வேலையில்லாத் திண்டாட்டத்தால் நாட்டில் பல இளைஞர்கள் தம் உயிரை வலிந்து நீக்கத் துணிந்து விட்டார்கள். அரசாங்க உத்யோகங்களை எதிர்நோக்கி அன்னிய நாட்டுக் கல்வியைப் பெரும்பணச் செலவில் பெற்ற இவர், உத்யோகம் கிடைக்க வழியில்லாததால், வேறு வழியில் வாழ்வை நடத்த சக்தியற்றவராய், இருப்பதைவிட இறப்பதே மேல் எனக் கொள்கின்றனர். நாட்டில் பட்டதாரிகள் வருடந்தோறும் பல்கி வருகின்றனர். இவர்கட்கெல்லாம் அரசாங்க உத்யோகங்கள் எங்கிருக்கின்றன? வாழ்வுக்கியைந்த கல்வியை மக்கட்குக் கொடுத்தாலன்றி வேலையில்லாத் திண்டாட்டமும், தற்கொலைகளும், பிற துன்ப நிகழ்ச்சிகளும் ஒழியா. அடிமை வாழ்வுக்குப் பக்குவப்படுத்தும் கல்வியை மக்கள் பெற்று, பின்னர் விழிப்பது பேதைமையாகும். அந்நிய ஆட்சியால் கிடைத்த பலன்களுள் வேலையில்லாத் திண்டாட்டமும் ஒன்றாகும். கைத்தொழிற் பள்ளிக்கூடங்கள் பலவற்றை நிறுவினால், இத்திண்டாட்டம் ஒருவாறு முடிவெய்தலாம். அரசாங்கத்தார் முயல்வரோ?

### வைதீகர் கவனிக்க.

சென்ற வாரத்தில் ஐம்பது வயது நிரம்பிய ஒரு கிழவருக்கும், ஓர் இளம் பெண்ணுக்கும் மணம் முடிந்ததென்றும், அன்று பிற்பகலே மணமகன் பிணமகனானா னென்றும் ஓர் துக்ககரமான செய்தி எட்டியது. இத்தகைய மணம் மணமெனக் கருதப்பட முடியுமா? பெண்ணின் பெற்றோர்கள் பெண்ணுக்கு ஏதாவது ஜீவனாம்சம் கொடுத்தாலன்றிப் பிணத்தை எடுக்கக் கூடாதெனத் தடுத்து விட்டார்களாம்! இம்மாதிரியே பணப் பித்துப் பிடித்துத் தம் பெண்களை கிழவர்கட்குக் கட்டிவிட்டு, அவதிப்படுவோர் பலர். பொருளை நயிப் பொருத்தமிலா மணங்கள் நம் நாட்டில் நடைபெறுவது நின்றாலன்றி நாம் விடுதலையடையப் போவதில்லை. இளமை மணத்தையும் பொருத்தமற்ற மணத்தையும் சட்ட மூலமாகத் தடுத்துவிட வேண்டுமென்பதை ஆட்சேபித்து எதிர்க்கும் வைதிகர்கள் இந்நிகழ்ச்சியை உற்று நோக்குவாராக. இனி இந்த இளம் பெண் விதவைக் குழுவில் சோகப்பட்டுத் துன்பமடைவது திண்ணம். இனியவாழ்வும் குழந்தைப் பேறுமின்றி மறைந்து மறைந்து வாழுதல் வேண்டும். இக்கொடுமைக்கு விமோசனம் செய்தல் அவசியமாகு மென்பது சீர்திருத்தக்காரர் கருத்து. இதனை வெறிகொண்டெதிர்க்கும் ஆசாமிகள் பால்ய விவாகத்தையும், பொருமாறான விவாகத்தையும் தடுக்க ஒத்துக்கொள்ளவேண்டும். இன்றேல் விதவா விவாகத்தை ஆதரித்தல் கடமையாகும்.

### குற்றாலம்.

கனம் மந்திரி சுப்பராயன் அவர்கள் குற்றாலத்திற்கு சென்ற வாரத்தில் சென்றிருந்தபோது, அருவிவிழுமிடத்திலுள்ள அபாய நிலையைக் குறித்தும் ஊரின் சுகாதாரக் கேட்டைக் குறித்தும் யோசிக்கப்பட்டதாக அறிகிறோம். அக்கூட்ட நிகழ்ச்சிகள் சுறுசுறுப்பையும் களிப்பையுந் தருவதாக இல்லை. அக்கூட்டம் கூடினதுடன் முடிந்துவிடக்கூடுமோ என்ற ஐயங்கூட உண்டாகிறது. ஆனால் மந்திரியார் கவனிப்பதாகத் தெரிவித்திருப்பது பாராட்டற்குரியது. ஜில்லாக் கலெக்டர் சிறிது ஊக்கங் காட்டக் கூடுமென்று நம்பவும் இடமில்லாமல் போகவில்லை. அருவியைச் சீர்ப்படுத்த ரூபாய் ஏழாயிரம வசூல் செய்து கட்டிவிட்டால் பட்டும் வேலை முடிந்துவிடாது. ஊரிலுண்டாகிற ஆபாசங்கள் ஒழிவதற்குத் தக்க ஏற்பாடு செய்தல வேண்டும். அரைகுறையான திருத்தங்களாலாவது, கத்துகிற காக்கைக்குச் சோற்றை வீசியெறிவது போல் செய்யப்படும் சிறு திருத்தங்களாலாவது குற்றாலம் சீர்திருந்ததென்பது நிச்சயம். தகுந்த பொருளை அரசாங்கத்தார் நல்குவதோடு, தனி உத்தியோகஸ்தர்களை நியமித்து ஆண்டுதோறும் கவனிப்பதற்கும் ஏற்பாடு செய்தல் வேண்டும். சுகவாசத்திற்காகச் சென்றிருக்கும் இடத்தில் எவ்வளவு கஷ்டங்களும் நஷ்டங்களும் உண்டாகவேண்டுமோ அவ்வளவு வசதிகளும் திருக் குற்றாலத்தில் உண்டென்பதை அரசாங்கத்தார் அறிதல் வேண்டும்.

## உள்ளூர்ச் செய்தி.

| | |
|---|---|
| தப்ப வெப்ப நிலை. | அஅ டிகிரி. |
| சென்னை உண்டியல் வட்டம் | 0—ச—சு |
| ரங்கூன் உண்டியல்வட்டம் | 0—கஉ—0 |
| பவுன் (பொற்காசு) | கரு—கூ—0 |
| சீமை வெள்ளிக்கட்டி | சுரு—0—0 |

காலநிலை:—மந்தாரமாகவே யிருக்கிறது. ஆகாயம் கார்மேகத்தால் மூடப்பட்டிருந்தாலும், மழை சிறிதும் பெய்யவில்லை. தண்ணீர்க் கஷ்டமும் தீர்ந்தபாடில்லை.

படுகொலை:—விஸ்வகர்ம வகுப்பைச் சேர்ந்த ஒருவன் கர்ப்பிணியாயிருந்த தன மனைவிமீது சந்தேகங்கொண்டு, அவள் முகத்தில் அம்மிக்குழவியை வீசி யெறிந்ததால் அவள் மண்டை உடைந்து உயிர்விட்டாள். தேவகோட்டையிலிருந்து தன் மகளையும் மருமகனையும தன் ஊருக்குக் கூட்டிக்கொண்டுபோக பெண்ணின் தகப்பனார் வந்திருக்கும் போதுதான் இவ்விஷயம் நடந்ததாம. கணவனைப் போலீஸார் பிடிப்பதற்காகத் தேடித் திரிகிறாரென ஒருநிருபர் அறிவிக்கிறார்.

பகல்திருட்டு:—மோட்டார் நிலையத்தில் டிக்கட் விற்கும் ஒருவன் சென்ற ஞாயிறன்று, நடுப்பகலில நகரச் சிவன் கோவில் சமீபம், தெருவில் நின்றுகொண்டிருந்த ஒரு சிறு பெண்ணின் கழுத்திலிருந்த தாயித்தை அறுத்துக்கொண்டு ஓடினான். பிள்ளை கூக்குரலிட அங்கிருந்தோர் யாவரும் அவனைத் துரத்திக்கொண்டே ஓடிப் பிடித்தனர். கையப்புடைத்து அவனை ஊர் அம்பலகாரரிடம் ஒப்புவித்திருப்பதாகத் தெரிகிறது.

டிப்டிகலக்டர்:—தேவகோட்டையில் புதிதாய் நியமிக்கப்பட்டிருக்கும் டிப்டி கலெக்டர் திரு. திருவேங்கட முதலியாரவர்கள் ஜூலை கச-ந்தேதி தம வேலையை ஒப்புக்கொண்டார் எனத்தெரிகிறது.

திரு. ராமச்சந்திரன்:—திருவனந்தபுரத்திலுள்ள ஒரு பிரபல வக்கிலுடைய புத்திரனான திரு. ராமச்சந்திரன் என்பவர் தற்காலம் இவ்வூர் கதர் ஸ்டோரில் வந்திருக்கிறார். இவரது சகோதரர் லண்டனில் படித்துவருகிறார். ஒத்துழையாமை காலத்தில் தன் படிப்பை விட்ட திரு. ராமச்சந்திரன் சிலகாலம் கவி ரவீந்திரர் நடத்திவரும் விஸ்வபாரதியில் பயின்று பட்டம் பெற்றதுமன்றி, மகாத்மாவுடன் சில காலம் 'யங் இந்தியா'வின் துணை ஆசிரியராகவும் இருந்து வேலைபார்த்து வந்தார். தமிழ் நாட்டிலுள்ள கதர் நிலயங்களைப் பார்த்து அறிவதற்காகவே இங்கு வந்திருக்கிறார். கோளத்தில் நிறுவப்படப்போகும, அகில இந்திய சர்க்காசங்கக் கிளை ஸ்தாபனத்திற்கு அவர் தலைவராயிருப்பார்.

நர்ஸரி:—பள்ளத்தூர் திவான் பகதூர் அ. மு. முருகப்பச்செட்டியார் அவர்களால் நடத்தப்பட்டு வரும் ஆஸ்பத்திரியில் இதுகாறும் டாக்டராயிருந்த திரு. சுப்பிரமணிய அய்யர் எம். பி. பி. யஸ். அவர்கள் தற்பொழுது கல்லுக்கட்டி வடகரையில் ஓர் 'நாஸரி' திறந்திருக்கிறார்.

—

### ௯ லட்சம் பெறுமான கல்.

ரங்கூனில் சிவப்புக்கல் வியாபாரியான கோபாலகைமிற்கு மோகாடுகிலிருந்து ச௰மைல் தூரத்திலுள்ள சாங்கிலி சுரங்கத்தில் இரண்டரையரைக் கால் தோலா எடையுள்ள பெரிய சிவப்புக்கல் கிடைத்திருக்கிறதென்றும், முதல்தரமான இந்தக்கல் ௯-லட்ச ரூபாய் பெறுமென்றும் ரங்கூன் செய்தி கூறுகிறது.



## தந்திச் செய்தி.

சைகோன் ஆடி-௴ ௩-உ
உண்டியல் விலை நூற்று முப்பத்தொன்பதரை.
சிங்கப்பூர் வட்டம் பதினொன்றேகால்

பினங்கு ஆடி-௴ ௩-உ
உண்டியல் விலை நூற்று ஐம்பத்துநான்கு.
ஈயம் விலை நூற்றைந்து.
ரப்பர் விலை நாற்பத்தொன்று.

—

ரங்கூன் ஜூலை-௴ கரு-உ

| | |
|---|---|
| தவணைவட்டி | 0—க0—0 |
| பழயபவுன் | ச௩—கக—0. |
| புதியபவுன் | க௩—கூ—0. |
| படகு நெல் | ககூஉ. |
| ரயில்நெல் | கருகூ. |
| பெரிய மில் அரிசி | ௩கூ0. |
| சிறிய ,, | சகஎ—சகஅ. |
| எஸ் குயூ ,, | ச௩ரு. |
| மீடான் ,, | ச0ரு. |
| வெளி விலைகள்:— | |
| ஜூலை | ௩கூ0 |
| ஆகஸ்டு | ௩அஎ—௩அஅ. |
| மூன்று மாதங்கட்கு | ௩கூஉ—௩கூஅ. |
| மில்சார் புழுங்கலரிசி | ருஉ0. |
| ,, உ-ம் தரம் | சஅ0—ரு00. |
| நசேன் முழுப்புழுங்கல் | சரு0—சகூ0 |
| ,, அரை | சக0—சகரு. |
| மொச்சை | சருரு. |
| தட்டைப்பயறு | சஉரு—ச௩0. |
| உளுந்து நீர் க. | சஅ0. |
| ஷை உ. | சரு0. |
| வெள்ளை பீன்ஸ் | சஎ0. |
| சிவப்பு பீன்ஸ் | உஎரு. |
| சோளம் | உக0—உஉ0. |

—

## லண்டன் மார்க்கெட்.

(From "Hindu")

லண்டன், ஜூலை கச-உ
நயம் பார்த்தங்கம்:— அவுன்ஸ் ஒன்றுக்கு விலை ச பவுன் ச ஷிலிங் க0இ பென்ஸ்.
வெள்ளி, ஸ்பாட் இருபத்தேழே கால்.
ஷை பார்வர்டு இருபத்தேழரை.
ரப்பர்: புகைபோட்டது, வாங்குபவர் விலை ஒன்பதேகாலே அரைக்கால் பென்ஸ்.
ஷை விற்பவர் விலை ஒன்பதரைப் பென்ஸ்.
பேல் கிரீப் புள்ளிபோட்டது: வாங்குபவர் விலை ஒன்பதேகாலே அரைக்கால் பென்ஸ்.
ஷை விற்பவர் விலை ஒன்பதரைப் பென்ஸ்.

—

### சென்னை.

ஜூலை க0-உ
பாங்கியில் மலாய் நாட்டு உண்டியல் விலை விற்பது நூற்றைம்பத்தாறு.
ஷை வாங்குவது நூற்றைம்பது.
இம்பீரியல் பாங்கி வட்டி ஏழு பெர்சண்டு.
இங்கிலாந்து பாங்கி வட்டி காலரை பெர்சண்டு.

## புதுப்பாளையம் காந்தி ஆசிரமம்.

திருச்செங்கோட்டில் திரு. சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரி அவர்கள் தலைமையில் நடைபெற்றுவரும் காந்தி ஆசிரமத்திற்கு விபவ ஆனி ௩க-ந்தேதியன்று மூன்றுவதாண்டு நிறைவுவிழாவும் ஆசிரமத்தோடு கூடிய தர்ம வைத்தியசாலைக்குப் புதிதாய்க் கட்டப்பட்ட கட்டடத் திறப்புவிழாவும், வங்காள ரசாயன சாஸ்திர நிபுணர் திரு. பிரபுல்ல சந்திர ராய் (ஸர். பி ஸி. ராய்) தலைமையில் நடைபெற்றன. அவ்வமயம் படிக்கப்பட்ட ஆசிரம அறிக்கையின் சுருக்கம் வருமாறு:—

காந்தி சேவா சங்கம் ககூஉ௩-ம் வருஷத்தில் ஸ்ரீயுத சேட் ஜம்னலால் பஜாஜ் அவர்களால் காந்தியடிகளின் உபதேசங்களை அனுசரித்து தேச சேவை செய்வதற்காக ஸ்தாபிக்கப்பட்டது. புதுப்பாளையம் ஆசிரமம் அச்சேவா சங்கத்தின் தமிழ்நாட்டுக் கிளை. காந்தி சேவகா சங்கத்தின் கிளைகள் தங்கள் ஆற்றலுக்கும், வசதிகளுக்கும் ஏற்றவாறு அடியிற்கண்ட துறைகளில் தேசத்தொண்டுபுரியும்:— க. கதர் வேலை. உ. பஞ்சம், வெள்ளம் முதலிய கஷ்ட நிவாரணம். ௩. தீண்டாமை ஒழித்தல். ச. மதுவிலக்கு. ரு. கோரக்ஷணை. சு. கிராம சுகாதாரமும், வைத்தியமும். எ. கிராமக்கல்வி.

ககூஉரு-௵ பிப்ரவரி௴ கூ-உயில் இந்த ஆசிரமம் ஸ்தாபிக்கப்பட்டது.

திருச்செங்கோடு தாலூகாவில் சென்றஐந்து வருஷங்களாக மழை சத்தமாயில்லாமல் கொடும் பஞ்சமாகஇருந்துவருகிறது. ஆனால் இப்பஞ்சத்திலடிபட்ட ஜனங்களைப்பற்றி அரசாங்கத்தாரோ, மற்றவர்களோ ஒரு கவலையும் எடுத்துக்கொள்ளவில்லை. அனேககுடும்பங்க ளிலங்கைக்கும், பினங்குக்கும் போய்விட்டன. இந்நிலைமையில் ஆசிரமம்ஸ்தாபிக்கப்பட்டவுடன் ஏராளமான வேளாள ஸ்திரீகள் நூல் நூற்க முன் வந்தது ஆச்சரியமல்ல. நாள் முழுவதும் ஒரு வேலையுமின்றி மயங்கி உட்கார்ந்திருந்தவர்கள் இப்பொழுது எவ்வளவு மகிழ்ச்சியுடன் ஓயாமல் இராட்டை சுற்றுகிறார்களென்பது கிராமங்களை நேரில் பார்த்தால் தெரியும். ஆசிரமத்தின் கதர் வேலையைப்பற்றி சில புள்ளி விவரங்கள்மட்டும் குறிக்கப்படுகின்றன.

ஆசிரமத்தைச் சுற்றியுள்ள கஎரு கிராமங்களில் உ,ச0உ நூற்பவர்களுக்கு பஞ்சு போடப்படுகிறது. ஆரம்பமுதல் இந்த மே௴ கடைசிவரை ரூ. இரண்டே முக்கால் லக்ஷத்திற்கு கதர் உற்பத்தி செய்யப்பட்டு, அதன் மூலம் நூற்போர்களுக்கு ரூ சுகூ,சுஅக-ம் நெசவுக்காரர்களுக்கு ரூ எசு,உ௩கூ-ம், வண்ணார்களுக்கு ரூ க,சுசஅ-ம் கூலிப்பணம் வழங்கப்பட்டிருக்கிறது. சமீபத்தில் நூற்போர்களுடைய சவுகரியத்திற்காக வேறு மூன்று இடங்களில் பஞ்சு கொடுத்து நூல் பெறும் கிளைகள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. அவைகளால் வேலை விரிவடைந்திருக்கிறது. வரும் ஆண்டில், மற்றும் சில கிளைகள் ஸ்தாபிக்க உத்தேசித்திருக்கிறது. இவ்வேலை அகில இந்திய சர்க்கா சங்கத்தாரிடம் கடனாக வாங்கிய ரூ. கூ0,000 மூலதனத்தைக்கொண்டு தமிழ்நாட்டின் போதாரவால் நடந்து வருகிறது.

தீண்டாமை யொழித்தலும் கதர் வேலையைப்போலவே ஆசிரமத்தின் முக்கிய இலட்சியங்களுள் ஒன்று. தீண்டாதவர்கள் ஆசிரமத்தில் தாராளமாகவந்து மற்றவர்களைப் போலவே நடத்தப்படுகிறார்கள். ஆசிரமத்தின் ஸ்தாபனம் முதற்கொண்டு இருந்துவரும் மெம்பர்களில் ஒருவர் அவ்வகுப்பைச் சேர்ந்தவர். முதலில் இருந்த அருவருப்பு நீங்கி, ஜனங்கள் ஆசிரமத்தினிடம் அன்பு பாராட்டுவதே தீண்டாமை குறைந்து வருகிறதென்பதற்கு அறிகுறி.

தீண்டாதவர்கள் பரம ஏழைகளென்று சொல்லத் தேவையில்லை. ஆனால், வறுமையைவிட ஜலக்கஷ்டமே அவர்களுடைய பெருந்தொல்லை. மற்ற சாதிக் குடியானவர்கள் தங்கள் காட்டுக் கிணறுகளிலுங்கூட அவர்களை ஜலம் எடுக்க விடுவதில்லை. வெகுதூரம் அலைந்து, பல அவமானத்திற்குட்பட்டே தினம் ஒரு குடம் தண்ணீர் சம்பாதிக்க வேண்டியிருக்கிறது. இக்கொடுமையைத் தீர்ப்பதற்கு இவர்களுக்கென்று ஐந்தாறு கிணறுகள் வெட்டத் தீர்மானித்திருக்கிறோம். மூன்று கிணறுகள் வேலை நடந்து வருகிறது. கிணறு வெட்டுவது கஷ்டம். சுரங்கம்போட்டு ச0 அடிகளுக்கிழே வெட்டினால்தான் ஜலம் கிடைக்கும். ஆகையால்சரியான கிணறு ஒன்றுக்கு குறைந்தது ரூ. க,000 வரையில்செல்லும். இத்திட்டத்தை பூர்த்திசெய்ய குறைந்தது ரூ. ரு,000 வரை ஆகும். கிணறுகள் வெட்டுவதுடன், தீண்டாதவர்களுக்காக உ0 வீடுகள்கொண்ட ஒரு சிறு கிராமம் கட்டி அதில் உ0 குடிகளை ஸ்தாபித்து போதிய வசதிகளைச் செய்தால் தீண்டாதவர்களும் மற்றவர்களைப்போலவே சுத்தமாகவும், கௌரவமாகவும் வாழமுடியுமென்று நிரூபிக்க முடியும். இந்த உ0 வீட்டிற்கும் ரூ ரு,000செல்லுமென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. இதுபோலமற்ற சில சௌகரியங்களும் இவ்வகுப்பினர்களுக்கு செய்துகொடுக்கமுயற்சி செய்யப்படும். தமிழ் நாட்டிலிருக்கும் பிரபுக்கள் உதவிசெய்து இவ்வேலைகளை நடத்திவைக்க வேண்டுமென்று இவ்வறிக்கைமூலம் வேண்டிக்கொள்ளுகிறோம்.

ஆசிரமம் தொடங்கிய முதல்வருஷத்திலேயே ஒரு தருமவைத்திய சாலை அவசியமென்று தெரிந்தது. சுற்றுப்பக்க கிராமங்களில் நோயும், காயமும் அதிமாக விருந்தன. நோயாளிகளிற் பலர் ஆசிரமத்திற்காக வேலை செய்யும் நூற்பவர்களும், நெசவுக்காரர்களுமாக விருந்தார்கள். அவர்களின் கஷ்டம் சகிக்கமுடியாம லிருந்தது. ஆகையால் ஆசிரமத்தின் தரும வைத்தியசாலை ககூஉசு௵ நவம்பர்௴ உக-ம் தேதி திறக்கப்பட்டது. உடனே தூரகிராமங்களிலிருந்த நோயாளிகள் வந்து சிகிச்சை செய்துகொள்ள ஆரம்பித்தார்கள். இந்த கசு மாதங்களில் மொத்தம் உஅ,0கூரு பேர்களுக்கு சிகிச்சை செய்யப்பட்டிருக்கிறது. தினம் ஒன்றுக்கு சராசரி ரு0-பேர் வைத்தியசாலைக்கு வருகிறார்கள். இதில் ச அல்லது ரு பேர் தீண்டப்படாதவர்கள்.

அஜீரணத்தாலுண்டான வியாதிகளில் ஒரு பாதிகள், சாராயம் குடிப்பதினால் உண்டானவை. ஜலக்கஷ்டமும், இருக்கும் சொல்ப ஜலத்தை அசுத்தமான முறைகளில் உபயோகப்படுத்துவதும் சர்ம நோய்களின் முக்கிய காரணங்கள்.

வைத்தியசாலை இதுவரையில் ஆசிரமத்தில் மெம்பர்கள் குடியிருப்புக்காக கட்டப்பட்டிருந்த ஒரு குடிசையில் இருந்தது. இதில் போதுமான இடவசதியில்லாததால், இப்புதிய கட்டடம் கட்டப்பட்டது. இதற்கு ரூபா ரு000 செலவழிந்திருக்கிறது. ஆனால், இக்கட்டடத்தோடு வைத்தியசாலையின் குறைகள் நிவர்த்தியாகிவிடவில்லை. இன்னும் கொஞ்ச வசதிகள் ஏற்பட்டால், இவ்வைத்தியசாலையினால் அதிக உபயோகம் ஏற்படும். க0, கரு மைல் தூரத்திலிருந்து வரும் நோயாளிகளும், நெருக்கடியான நிலைமையில் சிகிச்சைக்குவரும் பிணியாளர்களும் வைத்தியசாலையில் தங்கியிருப்பதற்கு இடவசதி வேண்டும். மருந்து ஸ்டாக் ரூபா சரு0-க்கும், ரணசிகிச்சைக் கருவிகள் ரூ. சு00-க்கும் இருந்த போதிலும், அவைகள் போதுமென்று சொல்வதற்கில்லை. மாதம் சுமார் உ00 ரூபா வைத்தியசாலைக்காக ஆசிரமத்திலிருந்து செலவழிக்கப்படுகிறது. கதர் வேலையில் வரும் கொஞ்ச லாபத்தைக் கொண்டு இதுவரை நடந்துவந்திருக்கிறது. இவ்வருஷம் பஞ்சு விலை யேற்றத்தினால் கதர் வேலையில் இனி லாபமிருப்பது வெகு சந்தேகம். ஆகையால், இவ்வைத்தியசாலை ஸ்திரமாக நடப்பதற்கும், அதன் வேலை விரிவடைவதற்கும், நண்பர்களின் உதவியை ஆசிரமம் நாடி நிற்கிறது.

வைத்தியசாலை மூலம் நோயாளிகளுக்கு சிகிச்சை செய்வதோடு நிற்காமல், நோய்களைத் தடுப்பதற்கான சுகாதார வேலைகளைச் செய்வதும் இன்றியமையாதது. ஆசிரமத்தின் சுகாதார வேலை சுற்றுப்பக்கத்திலுள்ள குழந்தைகளின் ஆரோக்கியத்தைக் கவனிப்பதிலிருந்தே தொடங்க வேண்டுமென்று நினைத்தோம். வாரம் இருமுறை கஉ வயதுக்குக்கீழ்ப்பட்ட குழந்தைகளுக்கு ஸ்நானம் செய்துவைப்பதென்று ஏற்பாடு செய்யப்பட்டது. சனிக்கிழமைதோறும் எண்ணை தேய்த்து ஸ்நானமும், செவ்வாய்க்கிழமையன்று சோப்புகட்டி தேய்த்து குளிப்பாட்டுவதுமாக தீர்மானித்து கஅ—உ—உஅ லிருந்து இம்மாதிரி செய்து வருகிறோம். ஆனால் குடியானவர்கள் தீண்டாதவர்களோடு தங்கள் குழந்தைகளை நீராட அனுப்ப சம்மதிக்காததால் பக்கத்துக் கிராமங்களிலிருக்கும் சக்கிலிக் குழந்தைகள் மாத்திரம் வந்து குளித்துக்கொண்டிருக்கிறார்கள். ஆரம்பத்தில் ச0 குழந்தைகளுக்கு மேல் வந்தார்கள். ஆனால் இப்பொழுது உ0 குழந்தைகள் தான் ஒழுங்காக வருகிறார்கள். வரவா வளரும். ஆசிரமத்தின் வைத்தியரும், மற்ற மெம்பர்களும் நேரில் குழந்தைகளுக்கு தலைமயிர் சிகிஸ்நானம் செய்வித்து துடைத்துவருகிறார்கள். ஸ்நானத்திற்குப் பிறகு குழந்தைகளுக்கு சிறு ஆகாரம் கொடுத்துவருகிறோம்.

தற்சமயம் ஆசிரமத்தில் கஉ தொண்டர்கள் இருக்கிறார்கள். அவர்களில் சு பேர்கள் பழய ஒத்துழையாமைக்காரர்கள்.

ஆசிரமம் ஸ்தாபிக்கப்பட்டு மூன்று வருஷம் ஐந்து மாதம் ஆயிற்று. வேரூன்றி ஒரு ஸ்திர நிலையை அடைந்துவிட்டது என்று சொல்லலாம். பிரதி வருஷமும் அதன் வேலை விரிவடைந்து மேன்மேலும் தொண்டு புரிந்து வளரவேண்டுமென்பது ஆசிரமவாசிகளின் கோரிக்கை. அதற்கு அன்பர்கள் ஆசீர்வதித்து உதவிபுரியுமாறு வணக்கத்துடன் வேண்டிக்கொள்ளுகிறோம்.

## கப்பற் செய்தி.

நாகபட்டணத்திலிருந்து கப்பல்கள் மலாய் நாட்டிற்குப் பிரயாணமாகும் விபரம் வருமாறு:—

| | | |
|---|---|---|
| "தெய்ரியா" | ஜூலை௴ | உக—உ |
| "ரஜூலா" | ,, | உகூ—உ |

'எதியோபியா' கப்பல் நாளைமதினம் சென்னையிலிருந்து ரங்கூனுக்குப் பிரயாணமாகும்.

# நமது தபால்பெட்டி.

### பாகனேரி.

ஆடிப்பூசை:— நாளது ஆடி மீ ௫-ம் நாள் நடக்கவிருந்த இப்பூசை ஆடிப்பூர விழாவை முன்னிட்டு அ-உ திங்கட்கிழமை அன்று மாற்றி வைக்கப் பட்டிருக்கிறது என ஒரு அன்பர் அறிவிக்கிறார்.

### பள்ளத்தூர்.

ஆஸ்பத்திரி:—பள்ளத்தூரில் திவான் பகதூர் அ. மு முருகப்ப செட்டியார் அவர்களால் நடக்கப்பெற்று வரும், ஆஸ்பத்திரிக்கு, ஐரோப்பா சென்று பல வருடங்கள் படித்து பட்டங்கள் பெற்ற டாக்டர் பன். வி. அப்பய்யா M. R. C. S., L. R C. P., D. G. O., M. R. C. P, G. L. M. (Rot) அவர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். இந்த டாக்டர் பலவித சிகிச்சைகளிலும் திறமை வாய்ந்தவரெனத் தெரிகிறது என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

### மாயவரம்.

கும்பாபிஷேகம்:—திருவா வடு து றை ஸ்ரீலஸ்ரீ பண்டார சன்னதிக்கும் திருப்பணி செட்டியாருக்கும் கும்பாபிஷேக விஷயமாக இருந்த தகராறு ஒருவாறு சமாஸமாய் முடிந்துவிட்டது. ஸ்ரீ மாயூரநாதஸ்வாமிக்கு வருகிற ஆவணிமாதம், ஆதவன் தோன்றி ஒருநாளிகையில் (காலை ௬வ மணிக்கு) வெகு விமரிசையாக கும்பாபிஷேகம் நடைபெறும். தர்மபுரம் ஆதீனத்திற்குட்பட்ட ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிக்கும் அதே தினத்தில் அதே லக்கினத்தில் கும்பாபிஷேகம் நடைபெறும் என்று ஒரு நிருபர் அறிவிக்கிறார்.

### இராயப்பேட்டை.

(சென்னை.)

ஆண்டுவிழா:—சென்னை இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜனசபையின் ௨௯-வது ஆண்டு நிறைவுவிழா விபவ ஆண்டு ஆடித்திங்கள் ௬, எ, அ நாட்களில் "குகானந்த நிலய"த்தில் நடைபெறும். "தமிழ்மகள்" ஆசிரியை ஸ்ரீமதி மா. மங்களாம்மாள் அவர்கள், திரு. ஆ. பாலகிருஷ்ணபிள்ளை அவர்கள் பி. ஏ. எம். எல்., பொதுநிலைக்கழகத் தலைவர் உயர்திரு சுவாமி வேதாசலம் அவர்கள் முறையே இம்மூன்று நாட்களிலும் தலைமை வகிப்பார்கள். பேரறிஞர் பலர் பொருட்செறிவு கொண்ட தண்டமிழ் சொற்பெருக்குகள் நிகழ்த்துவார்களென சபையின் நிர்வாக அங்கத்தினர் அறிவிக்கின்றனர்.

### ஆவினிப்பட்டி.

விவேகானந்தர் கல்விக் கழகம்:—இக் கழகத்தின் இரண்டாவது ஆண்டு ஆறாவது மாதக் கூட்டம் வைகாசித் திங்கள் ௩௨-உ ஞாயிற்றுக்கிழமை மாலை ௪ மணிக்கு சதாசிவக்குருக்கள் தலைமையிற் கூடிற்று. அவ்வமயம் மாணவர்கள் 'அறஞ்செயவிரும்பு, ஆறுவதுசினம், பெற்றோர்களின் கடமை' என்ற விஷயங்களைப் பற்றி பேசினார்கள். பின்னர் கவி. வினைதீர்த்தான் ஆச்சாரி திரு. பெ. பெரி. சுப்பிரமணியச் செட்டியாரவர்கள் 'பக்தி' 'பூட்டு' என்ற விஷயங்களைப்பற்றி மிகவும் அழகாக சொற்பெருக்கிட்டார்கள், தலைவரவர்கள் முடிவுரைகூற வந்தனவாழ்த்துடன் ௬-மணிக்கு கூட்டம் இனிது நிறைவெய்தியது என காரியதரிசி அறிவிக்கிறார்.

### வலையமாநகரம்.

இவ்வூரில் சில தினங்கட்கு முன் ஒரு பெரிய சந்நியாசி வந்து தான் பெரிய சித்தரென்றும், தன்னால் பல அற்புதச் செயல்கள் செய்ய முடியுமென்றும் பாசாங்கு செய்து, மழை வருவிக்க முடியுமெனக் கூறினான். அவன் கூறியபடி இவ்வூர் நகரத்தார் அவனை ஒரு மேடையிலிருத்தி, அவனைச் சுற்றி ஐந்து ஓமகுண்டங்கள் ஏற்படுத்தினார்கள். ௪—எ—௨அ-ம் தேதி முதல் பூசை நடைபெற்று வந்தது. அன்றிரவு சுமார் ௨-மணிக்கு மேற்படி சந்நியாசி வெளியில் போய்வருவதாய்ச் சொல்லிப் போனவன் திரும்பி வரவேயில்லை. எங்கு தேடிப் பார்த்தும் ஆளகப்படவில்லை; மழையும் பெய்யவில்லை. ஆதலால் மற்ற ஊர்களிலும் இவ்வித சந்நியாசிகளுக்கு நகரத்தார் இடங் கொடுக்காதிருக்கும்படி ஓர் தனவைசிய அன்பர் எச்சரிக்கிறார்.

### மதுரை.

(நமது சொந்த நிருபரிடமிருந்து)

ஆகாய விமானம்:— இம்மாதம் ௬௨ தேதி பகல் ௪ மணி சுமாருக்கு பெங்களூரிலிருந்து டன்லப் மோட்டார் சாமான் வியாபாரிக்குச் சொந்தமான இரண்டு சிறு விமானங்கள் இந்நகருக்கு வந்து ஆகாயத்தில் வட்டமிட்டுக்கொண்டு திருப்பரங்குன்றத்திற்கு சமீபமாயுள்ள தெங்காய் கண்மாயில் இறங்கின. அங்கேயே ஒருவாரம் வரை தங்கி இருக்குமெனத் தெரிகிறது. விமானங்கள் இறங்கி இருக்குமிடத்திற்கு ஆயிரக்கணக்கான ஜனங்கள் சென்று பார்த்து வருகின்றார்கள். ஒவ்வொரு விமானத்திலும் மூன்று பேர்களுக்கு மேல் உட்காரக்கூடிய வசதியில்லை.

தொழிலாளர்:— தென்னிந்திய ரெயில்வேதொழிலாளர் வேலைநிறுத்தத்தையொட்டி மதுரை சுயமரியாதைச் சங்கத்தார் தொழிலாளர்களுக்கு வேண்டிய உதவி செய்யவேணுமாய் துண்டுப்பிரசுரங்கள் வெளியிட்டிருக்கிறார்கள்.

### திருக்குற்றாலம்.

காலநிலை:—சிறிது சிறிது சாரலும் மப்பும் மந்தாரமுமாக இருந்துவருகிறது. அருவியிலும் போதுமான ஜலம் வந்துகொண்டிருக்கிறது. காலநிலை சுகமாகவே இருந்துவருகிறது. சாரல்காலசுகம் கருதி வந்தவர்களில் பலர் திரும்பிவிட்டார்கள் என்று பத்திரிகைகளில் வெளியாகி இருந்தவைகளுக்கு ஆதாரமில்லை. தினே தினே தனவைசிய பிரபுக்களும் ஏனையோரும் வந்துகொண்டே இருக்கிறார்கள். பங்களாக்கள் காலிகிடையாது. இரண்டு ஒன்று இருந்தாலும் வாடகைகள் அதிகமே. கோவிலார் வருஷ வருஷம் புதுபுது கட்டடங்களை அமைத்துக்கொண்டே இருக்கிறார்கள்.

நகரத்தார் உபயம்:—இங்கு இச்சாரல் காலத்தில் வந்துகூடும் நகரத்தார்கள் சகாயத்தால் ஆடிமீ முதல் வெள்ளிக்கிழமையன்று கோவிலில் சுவாமி அம்பாள் சகல பரிவாரங்களுக்கும் விசேஷ அபிஷேக அலங்காராதி நைவேத்தியங்களும் ரிஷப வாகனத்தில் சுவாமி புறப்படுதலும் நடைபெறுதல் வழக்கம். இவ்வருடத்தில் ஸ்ரீமான் உ. ராம. உ. லட்சுமணஞ் செட்டியார் அவர்கள் முயற்சியின்பேரில் அதிக தொகை சேர்த்திருப்பதாகவும் மிகவும் சிறப்பாக நகரத்தார் உபயம் நடைபெறுமெனவும் தெரியவருகிறது.

### ஆ. முத்துப்பட்டினம்.

மாதக்கூட்டம்:—நாவுக்கரசு நற்சபையின் ௬-வது மாதக்கூட்டம் சென்ற ஆனி ௨௫-ம் நாள் பிற்பகலில் திரு. தண்டபாணி தேசிகர் கடவுள் வாழ்த்துக்கூற திரு. கல்யாண சுந்தர சாஸ்திரியார் தலைமையில் நடைபெற்றது. திருவாளர்களான சித. நாராயணன் செட்டியார், காசிச் சுவாமிகள், மு. திருவேங்கடமய்யங்கார் இவர்கள் முறையே, "அகமும் புறமும், அனுபவக் கருணை, பிறவிப்பயன்" என்பதுபற்றி பேசிய பிறகு தலைவர் முடிவுரையுடனும் வந்தன வாழ்த்துடனும் இரவு ஒன்பது மணிக்கு அவை இனிது நிறைவெய்தியது எனக் காரியதரிசி அறிவிக்கிறார்.

சம்பாவனை:—நாவுக்கரசு நற்சபைக்கு ஆ. முத்துப்பட்டினம் திருவாளர் சித. நாராயணன் செட்டியார் ஆனி ௨௨-ம் நாள் நடைபெற்ற தமது மகன் திருவளர்செல்வன், நாச்சியப்பன் காப்புக்கட்டுப் புதுமையில் ரூபாய் பதினொன்று நன்கொடை தந்துள்ளார்கள். அன்னார்க்கு நன்றி உரியதாகுக என சபை அமைச்சர் அறிவிக்கிறார்.

திருவுலா:—ஆனி ௨௯-ம் நாள் இரவு இவ்வூர் ஸ்ரீலோகநாயகி அம்பாள் அன்ன வாகனத்தில் அழகுபெற அலங்காரஞ் செய்யப்பெற்று வயிர ஆபரணங்களுடன் திருவீதி வலம்வந்த காட்சி வனப்புடையதாக இருந்தது. நெடுங்குடி பெரியசாமி என்ற பதினன்கு வயது நிறையப்பெறாத சிறுவனின் நாதசுரம் கேட்பதற்கு இனிமையாக இருந்தது என ஒரு அன்பர் அறிவிக்கிறார்.





### நோட்டீஸ்.

தேவகோட்டை டி. முன்சீப் கோர்ட்டு

1927-ஞ் O .S. No 311

ரெங்கசாமி நாயுடு.........வாதி.

கோட்டையூர் பெரி. பள. ராம. செல்லப்ப செட்டி என்ற பழனியப்ப செட்டியார் } பிரதிவாதி.

வாதிக்குப் பிரதிவாதி 5—2—26-ல் எழுதிக்கொடுத்த பிராம்சேரி நோட்டின் பேரில் வரவேண்டிய ரூ. 1745-க்கும் பின் வட்டி செலவையும் வரப்பத்த பிராது செய்திருக்கிறது. பிரதிவாதிக்கு எதிர்வாதமிருந்தால் டிஸம்பர் வாயிதாவான.......8-8-28-ல் காலை 11-மணிக்கு கோர்ட்டில் நேரிலாவது வக்கீல் மூலமாவது ஆஜராகலாம் தவறினல் எக்ஸ்பார்ட்டியாக தீர்ப்பு செய்யப்படும். (357)

P. ராமசாமி அய்யர்,

தேவகோட்டை 6—7—28 } வாதிவக்கீல்.



## அயலகம்.

லிப்டன் கம்பெனியில் சென்ற வருடம் வியாபாரம் மிகவும் குறைவாயிருந்ததால் எண்பத்தெண்ணுயிரம் பவுன் நஷ்டமேற்பட்டிருப்பதாக லண்டன் செய்தி கூறுகிறது.

ஃ ஃ

சர்வதேச பூகோள சங்கத்தின் ஆதரவில் இவ்வாரம் கேம்பிரிட்ஜில் ஓர் காங்கிரஸ் நடைபெறும். அதற்கு ௪௭ தேசங்களிலிருந்து பிரபல பூகோள சாஸ்திரிகள் செல்லுவார்களாம்.

ஃ ஃ

சமீபத்தில் தென் ஆப்பிரிக்காவில் விமானத்தில் சுற்றுப்பிரயாணஞ் செய்த லேடி ஹீத் ராச்செஸ்டரில் பிரயாணஞ் செய்கையில், ௪௯000 அடி உயரத்தில் ௬0-குதிரை வேக விமானத்தில் பறந்தாளாம்.

ஃ ஃ

மெக்ஸிகோவிலுள்ள ஒரு வீட்டில் கோவிலைப்போல பலிபீடம் அமைத்து பிரார்த்தனை, புரோகிதம் முதலியவை நடத்தியதால் குருமார்களுட்பட ஐம்பது கத்தோலிக்கர்களை இரகசியப் போலீஸார் கைது செய்திருக்கின்றனர்.

ஃ ஃ

ஸைமன் கமிஷன் இந்தியாவுக்கு செப்டம்பர் ௨௫-ந்தேதி புறப்படுமென்னர், தேசத்தின் பல பாகங்களிலும் அரசியல் விஷயங்களைப்பற்றி கடு பிரசங்கங்கள் செய்வதாக ஸர் ஜான் ஸைமன் ஒப்புக்கொண்டிருக்கிறார்.

ஃ ஃ

அமெரிக்காவில் சில தினங்களாகப் பெருத்த உஷ்ணக்காற்று அடித்ததாம். இதனால் நியூயார்க்கில்மட்டும் ௬ பேர் இறந்தனர். சிகாகோவில் நடு ரோட்டில் நீல் உருகியதால் ஒரு பெண்ணின் கால் ஒட்டி நெடுநேரம் வண்டிப் போக்குவரத்து தடைபட்டதாம்.

ஃ ஃ

ஸ்பெயின் தேசத்து அரசரும் கவர்ன்மெண்டின் தலைவரும் வெளியில்லாத சமயம் பார்த்துக் கலகத்திற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டனவென்றும், அரசாட்சியைக் கவிழ்க்கத் தேசமெங்கும் பலத்த புரட்சி நடைபெறுகிறதென்றும் இதன் பயனால் சில கட்சிகளைச் சேர்ந்த நூறு பேர்கள் கைது செய்யப்பட்டிருக்கின்றனரென்றும் லண்டன் செய்தி கூறுகிறது.

ஃ ஃ

சமீபத்தில்கூடி முடிவுபெற்ற சீனதேசிய செல்வர்கள் மகாநாட்டில், சீனவின் செல்வ விஷய சம்பந்தமாகப் பல சீர்திருத்தங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. ராணுவத் தொகையை ௫ லட்சமாக வரையறுப்பது, பாங்கியை ஏற்படுத்திப் பாங்கி நோட்டுகள் வெளியிடுவது, டீல் நாணயத்திற்குப் பதிலாக வெள்ளி டாலர் நாணயம் ஏற்படுத்துவது, புதிய விகிதத்தில் ஏற்றுமதி இறக்குமதி வரிகளைவிதித்தல் என்பன அச்சீர்திருத்தங்களில் முக்கியமானவை.

ஃ ஃ

பிரிட்டிஷ் யுத்தக் கடனைத் தீர்க்க முன் அறிவித்தபடி ஒரு கனவான் ௫ லட்சம் பவுன் நன்கொடை அளித்திருக்கிறார். இப்பொழுது இன்னொருவரால் ௭௧௫-பவுன் அளிக்கப்பட்டிருக்கிறது. இவற்றைத் தவிர யுத்தம் ஆரம்பமானது முதல் பலராலும் நன்கொடையாக அளிக்கப்பட்ட தொகை ௪௬0௪000 பவுன். இதில் ௬௨௫000 பவுன் செக்யூரிடிகளாகவும், பாக்கி ரொக்கமாகவும் கொடுக்கப்பட்டிருக்கிறதென பொக்கிஷ இலாகா காரியதரிசி காமன்ஸ் சபையில் அறிவித்திருக்கிறார்.

ஃ ஃ

சீனதேசிய கவர்ன்மெண்டார் பிறதேசத்தாருடனிருக்க வேண்டிய சம்பந்தத்தைச் சில நிபந்தனைகளால் விளக்கியிருக்கின்றனர். அவற்றின்படி, சீனவிலுள்ள அன்னியர்களுக்கும் சீனரைப் போல சம அந்தஸ்து அளிக்கப்படும்; அன்னிய நாட்டினரைக் கலக்காமலே ஏற்றுமதி இறக்குமதி விஷயங்கள் நிர்ணயஞ் செய்யப்படும்; அன்னிய நாட்டினரும் அவர் சொத்தும் சீன கவர்ன்மெண்டாரால் பாதுகாக்கப்படும்; அன்னியர் சீன வரி முதலியவற்றைச் செலுத்துவதுடன் சீனக் கோர்ட்டு சட்டத்திட்டங்கட்கு உட்பட்டும் இருக்கவேண்டும்.

# தமிழகம்.

சென்னை மாகாணத்தில் மட்டும் ௭௬௦௦ கோவில்களும், ௪௦,௦௦௦ தேவதாசிகளும் இருக்கிறார்களாம்.

சென்றவாரம் அம்பாசமுத்திரத்தில் ஒருவன் வெடிமருந்து அடைத்துக்கொண்டிருக்கையில் குழாய் வெடித்து பலத்த காயமேற்பட்டு உயிர் நீத்தான்.

திருப்பதியில் பெருத்த மழைபெய்து குளங்களெல்லாம் பெருகிவிட்டனவாம். அதனால், இரண்டு பையன்களும், ஓர் இளம் பெண்ணும் நீரில் மூழ்கி இறந்தனரெனத் தெரிகிறது.

கரூர் தாலூகாவில் சின்னதாராபுரத்தருகில் ஓர் கிராமத்தில் மூப்பன் என்ற ஒருவன் தன் மனைவியை அரிவாள்கொண்டு வெட்டி காயப்படுத்திய குற்றத்திற்காக ஏழு வருடச் கடுங்காவல் தண்டனை அடைந்தானெனத் திருச்சிச் செய்தி கூறுகிறது.

திருநெல்வேலியைச் சேர்ந்த பணவீடலை என்ற கிராமத்தில் சப் இன்ஸ்பெக்டர் நார்மன் என்பவர் சின்னாட்களுக்குமுன் அவரது ஜாகையில் தூக்கிட்டுக்கொண்டு உயிர்துறந்தாராம். காரணம் காதற்பிணக்கே யென ஊகிக்கப்படுகிறது.

தஞ்சை ஜில்லா பார்ப்பனரல்லாதார் ௭-வது மகாநாடும், சுயமரியாதை முதலாவது மகாநாடும், தொண்டர் மகாநாடும், திருவாரூரில், ஜூலை மாதம், ௨௮, ௨௯, சனி, ஞாயிற்றுக்கிழமைகளில் நடைபெறும் எனக் காரியதரிசி அறிவிக்கிறார்.

சில தினங்கட்குமுன், திருத்துறைப்பூண்டி தாலூகாவைச் சேர்ந்த ஆயக்காரமபலத்திலுள்ள, பிரபல வியாபாரி ஒருவர் வீட்டில், பல தீவட்டிக்கொள்ளைக்காரர் புகுந்து சுமார் ௨௦௦௦ ரூபாய் பெறுமான நகைகளைத் திருடிச் சென்றனராம். ஜனங்கள் மிக்க பீதியுடனிருக்கின்றனரெனத் தெரிகிறது.

குற்றாலத்திலுள்ள ஒருவர் பெயரால் அவரது உறவினருக்கு வேறொருவர் தந்தி கொடுத்து ௫௦ ரூபாய் பெற்றுக்கொண்டாரென்றும், இது விஷயமாகப் பிராது கொடுத்ததில் பொய்த் தந்தி கொடுத்தவனைக் கண்டுபிடிக்கப் போலீஸார் முயற்சி செய்துவருகின்றனரென்றும் தெரிகிறது.















# எதிரொலி.

### கல்யாணத்தரகு.

இந்தியாவில் சீதனமுறை, இந்து விவாகங்களின் வியாபாரத்திற்கு ஆரம்பமாகும். அடியிற்கண்டபடி ஓர் பிரபல வட இந்தியப் பத்திரிகையில் கல்யாண விளம்பரம் வெளியிடப்பட்டிருக்கிறது:—

மூன்று நிமிடங்களில் மணம் நிச்சயப்படுத்தப்படும்.

நீங்கள் ஒரு பணக்கார, எளிய, படித்த பெண்ணையோ அல்லது விதவையையோ மணக்கவிரும்பினால், உடனேயே சகரான்பூர் நம்பர். ௬. டெலிபோனுக்குத் தெரிவியுங்கள்; உங்கள் விருப்பப்படி மணம் நிச்சயிக்கப்படும். மானேஜர்—ஹிந்து சம்பந்த சகாயம், சகரான்பூர்.

இவ்விதத் தரகுகள் இந்தியாவின் முன்னேற்றத்தைத் தடைப்படுத்துவதுமன்றி இழிவுபடுத்தவுஞ் செய்கின்றன. ஆனால் இவை எப்படி உண்டாயின வென்பது இலகுவில் அறியக்கிடக்கிறது. இந்தியாவிலுள்ள சிறுவர்களும் சிறுமிகளும் தாமே சந்தித்து தங்கள் மணங்களை முடிவுசெய்ய முடியாதவராயிருக்கின்றனர்—நடுக்கந்தரும் மேனாட்டுமுறை. பதினாறு வயது முற்றப் பெறுதற்கு முன் பெண்களுக்கு மணமுடிக்கப்படல் வேண்டும்—அவர்களுடைய கிளைச்சாதியினுள்ளும் அவர்கள் கோத்திரத்திற்குப் புறம்பாகவும் இவ்விதக் கட்டுப்பாடுகளிடையில், வாழ்க்கைக்குத் துணையாகத் தக்கவரைக் கண்டுபிடிப்பது கஷ்டமாதலால், மணத் தரகுகள் துணைபுரிய முன்வருகின்றன. இவ்விதத் தரகுகளையோ, இவைகளைப் பிரசுரிக்கும் பத்திரிகைகளையோ, அல்லது இவைகளை ஆதரிக்கும் மூடவழக்கங்களையோ கண்டிக்கலாமாவென்பது பலருக்கு முடிவுகட்ட முடியா விஷயமாகவேயிருக்கிறது. வேரோடு கல்வினால், தானகவே, புரோகிதர், வகுப்பு, சடங்கு இவையெல்லாம் ஒழிந்து போகும்; இவற்றையெல்லாம் நீக்கிவிட்டு நம்முடைய தெய்வீக வாழ்வை நிலைநிறுத்திக் கொள்ளலாம்.

"நியூ இந்தியா"

### பட்டு உற்பத்தி.

சென்ற சில வருடங்களாக அதிகப்பட்டு வரும் செயற்கைப்பட்டு உற்பத்தியும், அத்தொழிலில் ஈடுபட்டிருக்கும் கம்பெனிகள் அடைந்த பெரும் லாபத்தையும் நோக்கும்போது பெரும் ஆச்சரியமாகவே இருக்கிறது. இக்கம்பெனிகளில் ஒன்று கூறுவதுபோல, பட்டு உற்பத்தியை விட ஜனப்பெருக்கு அதிகப்பட்டே வருகிறது. ஆகையால் பெருமிதமாக செயற்கைப் பட்டும், செயற்கைக் கம்பளியும் உற்பத்தி செய்யப்பட்டாலும், பிற பஞ்சு, இயற்கைக்கம்பளி, கம்பளி, இயற்கைப்பட்டு இவைகளாலாய உடைகளைப் பாதிக்கவில்லை. ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் செயற்கைப்பட்டு அதிகமாக சைனாவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டுப் பலவிதத் துணிகள் நெய்யப்படுகின்றன. இவை அதி விரைவாகவும் விலை போகின்றன. ஷாங்காயில் செயற்கைப் பட்டு அபரிமிதமாக உற்பத்திசெய்யப்படுகிறது. இது மிகவும் மென்மையில் உயர்ந்த தினுசாகவிருப்பதால் ஐரோப்பிய நாடுகளில் செய்யப்படுவதுடன் சம நிலையிலேயேயிருக்கிறது.

"சைனா ஜர்னல்"

### அபாயச் சங்கிலி.

தனது நண்பரைப் பார்ப்பதற்காக ரயில்வண்டியின் ஜன்னல் வழியாக வெளியே எட்டிப்பார்த்த ஒரு இந்தியர் நூறுரூபாய்கொண்ட தனது பையைக் கீழே தவற விட்டுவிட்டார். உடனே அபாயச் சங்கிலியை இழுத்து வண்டியை நிறுத்தினர். கார்டு அவரைக் கீழிறங்கச் சம்மதிக்கவில்லை; மேலும் அடுத்த ஸ்டேஷன் மாஸ்டரிடம் அவர் ஒப்புவிக்கப்பட்டு, முப்பது ரூபாய் அபராதம் விதிக்கப்பட்டார். குற்றவாளி அப்பீல் செய்துகொள்ளவே, ரயில்வே அதிகாரிகளின் செயல் கண்டிக்கப்பட்டு, அபராதம் நீக்கப்பட்டது. எனினும், அந்தப் பிரயாணி இழந்துவிட்டதற்கு ஒன்றுங் கிடைக்கவில்லை. சிலநாட்களுக்குமுன் தன் நாயைக் காப்பாற்றுவதற்காக ஒரு ஐரோப்பியர் அபாயச் சங்கிலியை இழுத்தார். ஆனால் அவருக்கு ஒருவிதத் தண்டனையும் விதிக்கப்படவில்லை. இவ்விஷயத்தில் ஐரோப்பியரும், ரயில்வே அதிகாரிகளும் நற்காரியத்தையே செய்தார்கள். இந்தியர்களிடத்தும் அவர்கள் இவ்விதம் நடந்துகொள்ளலாம். 'நியாயமான' சந்தர்ப்பங்களிலெல்லாம் அபாயச் சங்கிலி உபயோகப் படுத்தப்படலாமென ரயில்வே சட்டம் கூறுகிறது. ஆகையால், நூறு ரூபாய்க்கு மேற்பட்ட தொகைகளை இழக்காமலிருக்க முப்பது ரூபாய் அபராதம் கொடுப்பது பெரிதல்ல.

'நியூ இந்தியா'

### அந்நியநாடுகளில் கதர்.

அந்நியநாடுகளிலும் பல இந்தியர்கள் கதருடுத்து வருகின்றனர். இதைப்பற்றிய சில விவரங்கள் வருமாறு:—

ஸ்ரீமான் ராம்ஜி ஹன்ஸ்ராஜ் இங்கிலாந்து செல்லும்போது தனக்கு வேண்டிய உடைகளையெல்லாம் கதரிலேயே அமைத்துக்கொண்டார். சமீபத்தில் வியாபார விஷயமாக தன் குடும்பத்துடன் ஜப்பானுக்குச் சென்றிருந்த ஸ்ரீமான் நீலகண்ட மஷ்ருவாலாவும் கதராடையே அணிந்துசென்றார். அவர் ஜப்பானிலிருந்தும் இங்கிருந்து (ஆமதபாத்) கதரை வரவழைத்துக்கொண்டார். மேலும், அவர் அங்கு வெள்ளைக் கதர்த்தொப்பியே அணிந்து வந்தார். சேத் மகர்ஜிபாய் (ஒருபார்ஸி கனவான்) கதர் கட்டியே சைனா சென்றார். லண்டன், அமெரிக்கா, ஆபிரிக்கா, அரேபியா, மலாய்நாடு, ஜெஸல்டன் (வடக்கு போர்னியோ) சிங்கப்பூர் முதலிய தூரப்பிரதேசங்களிலிருந்தும் அடிக்கடிக் கதர்வேண்டுமென கேட்கப்படுவதுண்டு. இவ்விடங்களில் கதர்ப் பிரசார ஆலயங்களுமிருக்கின்றன.

"காதி பத்திரிகை"

### கால்ராவைத் தடுத்தல்.

மலத்திலிருந்தும், பால், ஜலம், ஆகாரம், தும்பு, ஈக்கள், உடைகள் இவைகள் மூலமாகவும் இந்த வியாதி ஒருவரிடமிருந்து மற்றொருவருக்குத் தொத்துகிறது. ஆகவே நன்றாகக் காய்ச்சிய ஜலத்தையும் பாலையும் குடித்தும் நன்றாக வெந்த ஆகாரப் பதார்த்தங்களைப் புசித்தும் இந்த வியாதி வாராமல் தடுத்துக்கொள்ளுங்கள்.

'ஆரோக்கிய தீபிகை.'

## நோட்டீஸ்.

தேவகோட்டை டி.மு.கோர்ட்டு

O. P. No. 10 of 1928.

மனுதார்.

பள்ளத்தூரிலிருக்கும் லேட் உ. அ. உ. க. அ. அடைக்கப்ப செட்டியாரின் சம்சாரம் விசாலாக்ஷி ஆச்சி.

எதிர் மனுதார்கள்.

1. உ. அ. உ. க. ராம அருணாசலம் செட்டியார். 2. உ. அ. உ. க. லெக்ஷுமணன செட்டியார். 3. மைனர் உ அ. உ. க சித. நடேசன் செட்டியார். 4. மைனர் உ. அ. உ. க. சித. அருணாசலம் செட்டியார். 5. மைனர் உ. அ. உ. க. சித. லெக்ஷுமணன் செட்டியார், ஷை மைனர்கள் 3, 4, 5 எதிர் மனுதார்களுக்கு ஷை யார்களின் தாயார் வெள்ளச்சி ஆச்சி கார்டியன் மூலம்.

இதனால் சகலருக்கும் தெரிவிப்பது என்னவென்றால் மனுதாரின் புருஷனாகிய உ. அ. உ. க. அ. அடைக்கப்ப செட்டியார் என்பவர் சென்ற 16—2—1928ல் யாதொரு ஆண் சந்ததியன்னியில் பள்ளத்தூரில் இறந்துபோய் விட்டதாயும் மேற்படியாரின் சகல சொத்துக்களுக்கும் மனுதார் வார்சு என்று தெரியப்படுத்தி மனுதாருக்கு வார்சு சர்ட்டிபிகேட் இஷியூ செய்யக் கோரி இக் கோர்ட்டில் 12-4-4928ல் மனு தாக்கல் செய்யப்பட்டிருப்பதில், ஷை மனுவுக்கு 26—7—1928 தேதி வாயிதா ஏற்பட்டிருக்கிறது. மனுதாருக்கு வார்சு சாட்டிபிகேட் கொடுப்பதில் ஆக்ஷேபணையுள்ளவர்கள் இக கோர்ட்டில் ஷை வாயிதா தேதியில் பகல் 10 மணிக்கு ஆஜாகி ஆக்ஷேபணைகளை தெரிவித்துககொள்ளலாம்.

R. Krishna Ayyangar,
(356) மனுதாரின் வக்கீல்,
(9-7-28) தேவகோட்டை.




(346)




*Good Tyres Deserve Good Tubes — Goodyear Tubes.*

## இல்வாழ்க்கையின் இரகசியங்கள்.

விலை ரூபா இரண்டு. சந்தாதாரர்க்கு ரூபா ஒன்றரை.

☞ மானேஜர், குமரன் ஆபீஸ், காரைக்குடி.

(பத்திராதிபர்) சொ. முருகப்ப செட்டியாரால் காரைக்குடி 'குமரன்' அச்சுக்கூடத்தில் அச்சியற்றிப் பிரசுரிக்கப்பெற்றது.

